

ஓவியம் : கே. ஸி. நாகராஜன்

# கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

# அக்கம் பக்கம்

இந்த மாதம் 'பத்திரிகை—எழுத்தாளர்—சுதந்திரம்' என்பது பற்றி எழுதலாமென்று படுகிறது. வெகுநாட்களாகப் பலருக்கும் தெரிந்த பொருள் இதில் எத்தனையோ அபிப்ராய பேதங்கள், சர்ச்சைகள் நடந்திருக்கின்றன. இருந்தும் இது என்றைக்கும் சர்ச்சைக்குரிய விஷயமாக சிரஞ்சீவித்துவம் பெற்றுவிட்டது.

தமிழ்ப் பத்திரிகைகளின் நிர்ப்பந்தங்களுக்காக எழுதப்படும் தொடர்கதைகளை நாவல்கள் என்று ஒப்புக் கொள்ளமுடியாது என்பது ஒரு சாராருடைய வாதம். ஆனால் அதை அப்படியே மறுப்பது மற்ஜெருரு சாராரின் வழக்கம்.

எனக்குத் தெரிந்த சில பிரபல தொடர்கதை ஆசிரியர்கள் தமிழ்ப் பத்திரிகைகளின் நிர்ப்பந்தங்களுக்கும், தேவைகளுக்கும், எப்படித் தங்களை ஈடு கொடுத்து வளைந்து கொடுத்திருக்கிறார்கள் என்பதைச் சொல்லலாம் என்று நினைக்கிறேன். ஆசிரியர்களின் பெயர்கள் இங்கு முக்கியமல்ல. விஷயம்தான் முக்கியம். ஆகவே நடந்தவைகளை மட்டும் சொல்கிறேன்.

பிரபல சரித்திரத் தொடர்கதை ஆசிரியரின் தொடர் வந்து கொண்டிருந்த சமயம். பத்திரிகை நஷ்டத்தில் ஓடுவதால் நிறுத்தி விடலாமே என்று முடிவெடுக்கப்பட்டவுடன் கதாசிரியருக்குக் கடைசி இதழோடு கதையை முடித்துக் கொள்ளும்படி 'நோட்டீஸ்' கொடுத்தாகி விட்டது. அவரும் கதையை மட மடவென்று முடிக்கும் நிலைக்கு வந்துவிட்டார். பத்திரிகையைத் தொடர்ந்து நடத்த மறுபடியும் முடிவு எடுக்கப்பட்டவுடன், கதாசிரியரும் முடிக்க இருந்த கதையை மறுபடியும் தொடர்ந்து எழுதினர்.

ஃ

''என்ன சார், அடுத்தவார இதழுக்கான கதை இன்னும் வந்து சேரலியே''

''நாளைக்குள்ளே அனுப்சுடறேன்''

''படம் போடணும், பிளாக் எடுக்கணும், டயமே இல்லே''

''அப்படியா...கதாநாயகி ஃபோன்லே பேசற மாதிரி படம் போட்டுக்குங்க. குளிச்சுட்டு ஈரப் புடவையோட இருக்கா அவ... ஓகே''

''தாங்ஸ் சார்''

''ஒன் மினிட், இந்த வாரம் எதிலே முடிச்சிருக்கேன்? ... அதிலியா...தாங்க் யூ, நாளைக்குக் காலம்பற பையனை அனுப்புங்க, ஸைடு கொடுத்தனுப்பறேன்''

ஃ

உங்கள் கதை இன்னும் பத்து இதழோடு முடிய வேண்டும் ... உங்கள் கதை இன்னும் ஒன்பது இதழோடு முடியவேண்டும்...உங்கள் கதை இன்னும் எட்டு இதழோடு முடிய வேண்டும்...இப்படி ஒவ்வொரு வாரமும் தொடர்கதை ஆசிரியருக்கு மறக்காமல் கடிதம் எழுதும் பத்திரிகை, அதற்கு அடிபணியும் தொடர்கதை ஆசிரியர்கள்.

ஃ

''கதை நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் நம்முடைய வாசகர்கள் இதை ரெலிஷ் செய்யமாட்டார்களே''

''அப்படியா?''

''எஸ். யு பர்ஹாப்ஸ் டோன்ட் நோ. நாங்கள்தான் ஆக்சுவல் ஃபீல்டிலே இருக்கோம். எங்களுக்குத் தெரியறதே''




கசடதபற

ஒரு வல்லின மாத ஏடு

ஆசிரியர்: நா. கிருஷ்ணமூர்த்தி

ஆண்டுச் சந்தா : ரூ. 3—00

'கசடதபற'
1 தேவடி தெரு
சென்னை 4

''அப்படீன்னு சரி''

அதற்கப்புறம் கதாசிரியர் அந்தக் கதையையே முன்னாலும், பின்னாலும் சில சம்பவங்களைச் சேர்த்து 'கொழுக்கட்டையினுள் பூரணம் வைத்த மாதிரி' நான் நினைத்த கதையை எழுதிவிட்டேன். என்று பெருமையோடு சொல்லிக்கொண்டார்.

ஃ

''உங்கள் சௌகர்யத்திற்காகவும், என் சௌகர்யத்திற்காகவும், பத்திரிகையாளரின் சௌகர்யத்திற்காகவும் நானே தான் முழுக்கதையிலிருந்து குறைத்துக் கொடுத்தேன்'' என்று சொல்லித் தன்னைத் தானே சமாதானம் படுத்திக் கொண்டதோடு மற்றவர்களையும் சமாதானப் படுத்தும் கதாசிரியர்.

ஃ

நாட்டில் பொதுத் தேர்தல் வந்துவிட்டது. சமூகத் தொடர்கதை ஆசிரியர் கதையை எங்கோ சொல்லிக் கொண்டிருக்கிறார். ஆசிரியர் கூப்பிட்டுச் சொல்லுகிறார். ''என்ன ஸார். எலக்ஷன் வந்து விட்டது. உங்க கதை எங்கயோ இருக்கே. இந்த இதழிலேயே எலக்ஷனைக் கொண்டாங்கோ''

கதையில் உடனே எலக்ஷன் வருகிறது.

ஃ

''உங்கள் கதையில் பெண்களைப் பற்றி வர்ணனையே இல்லையே''

''அதுக்கென்ன சேர்த்துட்டாப் போச்சு. எங்கெங்கே வேணும்ன்னு சொன்னாச் சேர்த்துடறேன்''

ஃ

இப்படியெல்லாம் உருவாகும் தொடர் கதைகளைத்தான் தமிழ் இலக்கியத்தின் மகோன்னத நாவல்கள் என்று கூக்குரலிடுகிறார்கள். நாவல் பத்திரிகையில் தொடராக வருவதே பாவம் என்று யாரும் சொல்லவில்லை. தொடர் கதையாக எழுத முன்வரும்போது அதன் ஆசிரியர்கள் பலவிதமான நிர்ப்பந்தங்களுக்கும் ஆளாகிறார்கள். அதனால் நாவலின் முழுமை பாதிக்கப்பட்டு இலக்கியத் தன்மையை இழக்க நேரிடுகிறது. வாரா வாரம், மாதா மாதம் என்று பத்திரிகைகளின் தேவைகளுக்கு உட்பட்டு எழுதும்போது ஆசிரியரின் பிடியிலிருந்து நாவலின் இலக்கிய பூர்வமான அம்சங்கள் நழுவி, அதற்குப் பதிலாக ஸஸ்பென்ஸ், அது இது என்ற விவகாரங்கள் ஆக்ரமித்துக்கொள்கின்றன. பத்திரிகைகளின் நிர்ப்பந்தங்களை மீறி இலக்கியப் பிரக்ஞையோடு ஒரு தமிழ் நாவலை எந்த ஆசிரியரும் உருவாக்கியதாக எனக்குத் தெரியவில்லை. அன்றும், இன்றும் பிரபலங்களாகத் திகழ்ந்த— திகழ்ந்து வரும் தொடர்கதை ஆசிரியர்களுக்கு இப்படிச் சொல்வதால் கோபம் வருமானால் அதில் அர்த்தமே இல்லை.

—நா. கிருஷ்ணமூர்த்தி

---

# பூனைகள்

**கல்யாண்ஜி**

உள்ளே நுழைந்தபோதுகூட இவனுக்கு அப்படியொரு எண்ணம் வரவில்லை. இவன் நுழைந்தவாக்கில் அதுவும் வெளியேறியிருந்தால், 'எப்போதும்' வருகிற 'பூனைதானே' என்று இருந்திருப்பான். ஒரு முக்யத்துவமும் இருந்திருக்காது. இவனால் பார்த்ததும் படக்கென்று ஜன்னல் பக்கம் தாவி நுழைய முடியாத கம்பிகளுக்கிடையே தன் வழியை அவசரமாக அது தேடியபோதுதான், அவனுக்கும் 'இன்றைக்கு, அடிக்கடி அறையை அசுத்தப் படுத்தி விட்டுப் போய்விடுகிற அதை வெளியே விடக்கூடாது' என்ற ஒரு பரபரப்பும், கிளர்ச்சியும் உண்டானது. தேவையில்லாமல் உடம்பு சிலிர்த்தது. தொம்மென்று அறைக் கதவை வீசியடைத்தான். அதிர்ச்சியில் கொடியில் கிடந்த பாண்ட்ஸ் ஹாங்கரிலிருந்து வழவழத்து — ஒரு கீழிறங்குகிற பாம்பை நினைவூட்டியபடி— தரையில் சரிந்தது. பையில் சில்லரைகள் போட்டிருந்திருக்க வேண்டும்.

பூனை பதறி இதற்குள் இரண்டு முறை அறையைச் சுற்றிப் பாய்ந்தது. மறுபடியும் ஜன்னல் பக்கம் தாவித் தாவி, சுவர் வெளுப்பில் நகம் நறநறக்கச் சருகிச் சருகிக் கீழே விழுந்தது. ''உஸ்...உஸ்'' என்று கைகளால் தப்புக் கொட்டியபடி அதைப் பயங்காட்டினான். 'அது எந்நேரமும் தன் மேல் பாயலாம்' என்ற பயத்தோடு ஒவ்வொரு அடியாய் அதை நோக்கிவைத்தான். அது நிலை கொள்ளாமல் ஒரு சுற்றி மறுபடியும் ஓடி, அழுக்குக் கூடையிருக்கிற மூலைக்குச் சாடியது. சத்தமேயில்லாத அதனுடைய பரபரப்பு இவனுக்கு மேலும் உற்சாகம் கொடுத்தது. சடாரென்று போட்டிருந்த சட்டையைக் கழற்றிப் பந்தாகச் சுருட்டி வீசினான். அந்த இடத்தில் தான் இருந்ததே இல்லாதது போல் வெடுக்

கென்று அதுவலமாய் மேஜையைத் தாண்டி, மறுபடியும் ஜன்னல் கம்பிகளிடம் கெஞ்சியது—''வழி விடு, வழி விடு, வழிவிட்டு விடு''—பஞ்சுக் கால்களால்; தலை நுழைப்பால்.

மேஜையிலிருந்த பென்சில்கள், சீப்பு, டூத்ப்ரஷ் போட்டு வைத்திருந்த ப்ளாஸ்டிக் டம்ளர் சரிந்து எல்லாம் கீழே விழுந்தன. டம்ளர் ஒரு நிமிஷம் சாய்ந்தாடியது. சீப்பை எடுத்துப் பற்களை விரலால் ராவினான். 'ரிங்' என்கிற அந்த மென்மையான சத்தம் அதைச் சலனப்படுத்தக்கூடும் என எதிர்பார்த்தான். சீப்பை, ஒரு ரோட்டோர வியாபாரியைப் போல—வளைத்து அதைப் பார்க்க எய்தான். சுவரில் நாலடி உயரத்தில் பட்டுத் துள்ளி, பூனைக்குப் பக்கத்தில் இல்லாமலும் இவனுக்குப் பக்கத்தில் இல்லாமலும் விழுந்தது.

'எடுக்கப் போனால் மேலே பாய்ந்து விடுமோ?'

'பாயாது'

'பாயலாம்'

'பாயும்'

'கைக்கு எட்டுகிறாற்போல் ஏதாவது இருக்கிறதா? அதன்மேல் எறிய; புசுபுசுத்த அதன் வயிற்றைத் தாக்க; அந்தச் சாம்பல் ரோமங்களை உதிர்க்க; அதன் கோலிக் கண்களிலிருந்து பயங்கரத்தை உரித்து எடுத்துவிட—இருக்கிறதா ஏதாவது?'

மேஜையில் பார்த்தால் காலையில் படித்துவிட்டுக் கவிழ்த்தினாற்போலிருக்கிற 'இன்டிமஸி' தன் மஞ்சள், ஆரஞ்சு வண்ணங்களில் உருகுகிற அட்டையுடன், வாசிக்கப்படாத தன் மீதிப் பக்கங்களுடன் காத்திருந்தது. அதை எடுத்தான். தரையோடு தரையாய்த் தேய்த்தாற்போல் பூனையை நோக்கி விசையாகத் தள்ளினான். பாதி தூரம் கூடப் போகாமல் அது இடைப்பட்டு, ஒரு புத்தகத்துக்குரிய ஜடத்தனத்துடன், அவனுடைய அறையில் சிக்குண்டுவிட்ட பூனைக்காக அனுதாபமின்றிக் கிடந்தது. அதன் மஞ்சள், ஆரஞ்சு, கறுப்பு என்று படிப்பாக இறுகுகிற நிறத்தையே பார்த்துக் கொண்டிருந்த இவனுக்கு—நிறங்களால் அதைப் பயப்படுத்த முடியுமா என்று சோதிக்கத் தோன்றியது. சிவப்பே பிரதான வண்ணமாக சிதார் மீட்டுகிற அந்த ரவிசங்கர் காலண்டரைக் காட்டிப் பார்க்க நினைத்தான். அது ஜன்னலுக்கு நேர் மேலே தொங்கிக் கொண்டிருந்தது. எடுக்கக் கொஞ்சம் தயக்கம்.

புலி வேஷக்காரனைப்போல் 'உர்ர்ர்' என்று கைவிரல்களைப் பிருண்டப் போவது போல் முன்மடக்கிப் பாய்ச்சல் காட்டினான். அது நிழலைப்போல, மடிந்து, மறுபடியும் அழுக்குக் கூடைப் பக்கமாய்ப் பதுங்கி நிலைகொள்ளாமல் திருதிருத்தது.

'அது வழக்கமாக அசிங்கப்படுத்துகிற இடம் அதுதான்' என்பது அவன் நினைவுக்கு வர, அதை அந்த இடத்திலிருந்து உடனடியாக அப்புறப்படுத்தவேண்டும் என்ற அவசரம் மேலும் மேலும் ஏற்பட்டது. ஜன்னலின் மேல் ஏறி, ஒரு கையால் கம்பிகளைப்பற்றி, எம்பி, காலண்டரைக் கழற்றுகையில்—அந்தப் பூனையைப்போலத் தானும் இந்த ஜன்னல் கம்பிகளுடன். உடனடியாய்த் தொடர்புகொள்ள நேர்ந்துவிட்டதற்காகச் சிரித்தான். படத்தைப் பூனையின் பார்வை படுவதுபோல் நெருங்கி நெருங்கிக் கொண்டு போனான். பின்னவிட்டு, இவனையொட்டிய குறுகிய இடைவெளியினூடே நுழைகிற முயற்சியில் பாய்ந்து இவனை உராய்ந்து தாவியபோது—'பே' என்று ஒரு அமனிதமான குரலில் பயந்துகூக்குரலிட்டுப்பின்னால் சாய்ந்தான். இருதயம் வேகமாக அடித்துக்கொள்ள வியர்வை பெருகின அவனின் பயத்தினை சாந்தப்படுத்துவதாக — நீலத் தேதிகள் சுருண்ட காலண்டரில் இருந்து பாதியுருவில் மூடின கண்களுடன் ரவிசங்கர் வாசிக்கிற சிதார் இசை பிரதானமான சிவப்பாகி வழிந்து கொண்டிருந்தது.

'அதை அடித்துக் கொன்றே போட்டுவிட வேண்டும்'—மூர்க்கமாக எழுந்து அதை விரட்ட, விரட்ட ஆரம்பித்தான். ஜன்னல் கம்பிகளிடம் தலை நுழைத்து மறுபடிமறுபடி அது கெஞ்சிக்கொண்டிருந்தது. முயன்று தோற்று, முயன்று தோற்று தரையிலிருந்து, வாலில் கலவரம் நெளிய, முதன் முறையாக அது குரலெழுப்பியது. ஒரு நில விரவில், குழந்தையழுகையைப் போல, அடிவயிற்றிலிருந்து கேவிக் கேவி, கூரையில் நடந்து கொண்டிருந்த கடுவன் பூனை உடனடியாய் ஞாபகம் வந்தது. ஒரு கனவைபோல, அந்தப் பூனை நிலவு வெளிச்சத்தில் ஓட்டுக்கூரையில் ஏங்கின சோகமும் நடையும் அவனுக்குள் தெரிந்தன.

'இது அது இல்லை
அதன் மனைவி—?
அல்லது மகன், மகள்—?
சகோதரன், சகோதரி—?
.........
எது என் அறையை அசுத்தப் படுத்தியதோ அது,

அதுதானா?'

சன்னமாய் இரண்டுமுறை கத்திவிட்டு இவனுடைய பதிலுக்குக் காத்திருப்பது போல் அது மிகவும் இறுக்கமாக மௌனித்திருந்தது. வியர்வை பெருகி, அடர்த்தியாகத் தன் புருவத்துள் புகுவது அவனுக்குத் தெரிந்தது. பனியன் நனைந்துவிட்டிருந்தது. அவனும் 'மியாவ்' என்று கத்தத் தொடங்கினான். ': அது பதிலுக்குக் கத்தும், அதற்குப் பதிலாய்த்தான் கத்த வேண்டும்' என்று அவன் நினைத்தபடி மீண்டும் கத்தினான். அது ஒரு புள்ளியைச் சந்திப்பது போல், இவனையே ஏதோ ஓர் மையத்தில் குவித்து, அதைப் பார்த்தபடியே இமைக்காமல் இருந்தது. பிறகு மங்குகிற விளக்கைப் போலக் கண்களைச்சிறிதுசிறிதாகச் சுருக்கி ஆழமாக ஒருமுறை கூப்பிட்டது. ஒரு மெஸ்மெரிஸக்காரனைப்போல் இவன் விரல்களை நரம்பு விறைக்க அகற்றி, அதன் பார்வையை வசியப் படுத்துவதுபோல் ரெண்டு நிமிஷங்கள் நின்றான். ஸ்விட்ச்சைப் போட்டது போல் படக்கென்று அதன் மீது பாய்ச்சல்காட்டி மீண்டும் சத்தம் கொடுத்து உறுமினான்.

அது இடத்திலிருந்து அகன்று, சுவர்களின் ஓரமாக அறையைச் சதுரமிடத் தொடங்கியது. 'அதைக் களைப்படையச் செய்ய, நிற்காமல் ஓட ஓட விரட்டுவது தான் சரி' என்று அவன்விரட்ட ஆரம்பித்தான். அது சுத்துகிற திசையிலெல்லாம் இவனும் சுற்ற வேண்டியிருந்தது. கதவுப் பக்கம், சுவர்ப்பக்கம், ஜன்னல் பக்கம், சுவர்ப்பக்கம் என்று அடுத்தடுத்து மாறின காட்சிகளால் கண்கள் பிசகின. சுவரின் வெள்ளை, ஏதோ திரவமாய் இளகி நிற்பதுபோல் தெரிந்தது. உடைகளின் நிறங்கள் கலவையாக ஆரம்பித்தன.

அது ஒவ்வொருதடவை சுற்றி முடிக்கும் போதும், அவன் ஒன்று, இரண்டு என எண்ணத் தொடங்கியிருந்தான். கொஞ்சம் சுற்றுகளுக்கு அப்புறம் எண்ண வேண்டுமென்று தோன்றவில்லை. கதவு-சுவர்-ஜன்னல்-சுவர்—என்று திசைப்பட்டுக் கொண்டிருந்த அது, திடீரென்று குறுக்கில் ஊடுருவி, மேஜைக்கும் சுவருக்கும் ஒட்டியிருந்த இடது ஓரக் கால்பக்கம் உட்கார்ந்துகொண்டது. இவன் கையைத் தட்டியும் அது ஓடவில்லை. ஒவ்வொன்றாகக் கையாண்ட எந்த முயற்சிக்கும் அது அசையவில்லை. அதனுடைய மென்மையான அடிவயிற்றில் படபடப்புத் தெரிந்தது. அது அந்த இடத்திலேயே உறைந்து போய்விடச்சித்தங்கொண்டதுபோல்—பின் செய்யப்பட்ட ஒரு பட்டுப்பூச்சியின் நிலைப்போடு—ஒரே பார்வையாய் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தது. சற்றுக் குனிந்த மாதிரிப் பார்வை. பழுப்பாகக்கோடிட்டவிழிகள் அடிக்கடிச் சுருங்கிச் சுருங்கி அகன்றன. நெற்றியில் கோடுகள். இதுவரை இவனுக்கெதிராக உபயோகிக்கப் படாத—(ஏன்?)—முட்டை யோட்டின் இளநிறங்கொண்ட நகங்கள் அழுந்தின பாதங்கள். சத்தம் இல்லை.

வியர்வை வழிய, வழிய, அதையே குனிந்து பார்த்துக் கொண்டு நின்றான். மேஜைக்கு முன்னால் இருக்கி௦ ஸ்டீல் சேரை நகர்த்தித் தன்பக்கமிட்டு உட்கார்ந்து கொண்டு அதையே பார்த்தான்.

நழுவி விழுந்து கிடக்கிற பேன்ட்ஸ், எறிந்த சட்டைப்பந்து, வீசின சீப்பு, தள்ளிவிட்ட புத்தகத்தோடு தானும் ஒன்றாகிக் கொஞ்சநேரம் கண்களை மூடியிருந்தான். புஜமெல்லாம் குளிர்ந்து போயிருந்தது. 'இதற்கெல்லாம் அர்த்தம்உண்டா?' என்று அவனுக்குத் தோன்றியது. அதை வைத்துக் கொண்டே, அவன் அந்த அறையில் நுழைகையில் எப்படி இருந்ததோ, அந்தச்சூழ்நிலையைக் கொண்டுவந்துவிட வேண்டுமென்று தோன்றியது. தன் செயல்களை வரிசைப் படுத்தினான்.

சுருண்டு கிடந்தகாலண்டரை எடுத்து ஜன்னலைப்பற்றி மேலே ஏறித் தொங்கவிட்டான். இன்டிமஸி புத்தகத்தை எடுத்து மேஜை மேல் வீசினான். கீழேயிருக்கிற அது சடக்கென்று அதிர்ந்து மூலையில் இருக்கும் அழுக்குக் கூடைப் பக்கம் போனது.

'உனக்குப் பிடித்த இடம்.

எனக்குப் பிடிக்காத காரியத்தை நீ செய்ய,

உனக்குப்பிடித்த இடம்'—என்று ஆங்கிலத்தில் அதனோடு பேச்சுக் கொடுத்தபடி, சீப்பை யெடுத்து, டம்ளரை நிமிர்த்தி எல்லாவற்றையும் இட்டான். ஒரு தூரிகை செருகுகிற ஓவியனின் ஜாடியாக அது எப்போதும் இருக்கிறது என்று அவனுக்குத் தோன்றும். இன்றும் நினைத்துக்கொண்டான்.

சுற்றிப் பார்த்து, கொஞ்சம் நடந்து, குனிந்து அந்தப் பான்ட்டை, தூசியைத் தட்டி ஊதி, ஹாங்கரில் தொங்கவிட்டுவிட்டு அறையைச் சுற்றிப் பார்த்தான்.

இது அந்தக் கூடையண்டையிலேயே இருந்தது. 'குட்பை! புஸ்ஸி டியர்!' என்று சிநேகமாய் அதற்குக் கையசைத்துவிட்டுக் கதவுகளைத் திறந்தான். பந்தாகக் காற்று நுழைந்து அவனில் குளிர்ந்தது.

இவனும் போகாமலிருந்த அந்தப் பூனைக்கு முதுகைக்காட்டியபடியே கைகளை உயர்த்தி பனியனைக் கழற்றத் துவங்கினான். ●

## மழை

## ஒரு முன்னுரை

தொல்காப்பியகாலத்திலிருந்தே (அது எந்தக் காலம் என்று யாருக்கும் தெரியாது) இயல், இசை, நாடகம் என்ற முப்பிரிவுகள் தமிழ் இலக்கியத்தில் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. தொல்காப்பியத்தில் அப்பிரிவுகள் இல்லை. பரிபாடலில்தான் முதன்முதலாக இப்பிரிவுகள் பற்றிப்பேச்சு அடிபடுகிறது. அவ்வாறு சொல்லப்படும் நாடகப் பிரிவு எதைச் சொல்கிறது, குறிப்பிடுகிறது என்பதையும் யாரும் இதுவரை சொல்லவில்லை. சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லார் நாட்டிய அரங்கு நிர்மாணத்தைப்பற்றி விரிவாகப் பேசுகிறார். அவர் குறிப்பிடும் பரதம், அகத்தியம், பரத சேனாபதீயம் எல்லாம் அவர் காலத்திலேயே மறைந்து ஒழிந்தவை. அவர்காலத்தில் இருந்ததாகச் சொல்லப்படும் குணநூல், முறுவல், செயிற்றியம் முதலியவையோ, இப்போது வெறும் பெயர்கள்தான். ஆனால் ஒன்று நிச்சயம்; எல்லாம் நாட்டியத்தைப் பற்றியவை. நாடகத்தைப்பற்றியவையல்ல.

இதற்குப் பிறகு நாட்டியத்தைப் பற்றியோ நாடகத்தைப் பற்றியோ பேச்சே இல்லை. 10-11-ம் நூற்றாண்டுகளில் ராஜ ராஜேஸ்வர நாடகம், பூம்புலியூர் நாடகம் என நாடகங்கள் கோவில்களில் நடந்தன என்று கல்வெட்டுக்கள் சொல்கின்றன. அவ்வளவே. இதற்குப் பிறகு ஒரு நீண்ட பாய்ச்சல். 17-ம் நூற்றாண்டுக்குத் தாவி முக்கூடற் பள்ளுக்குத்தான் வரவேண்டும். அதுவும் ஒரு கவிதைநூல். எழுதப்பட்ட போது நாடகமாக இல்லை. 18-ம் நூற்றாண்டில்தான் வேலன் சின்னத்தம்பி என்பவர் அதை folk opera வாகத்தயாரித்தார், இதன் பின்னர்தான், பள்ளு—ஒரு பாமர நாட்டிய நாடகமாகக் கொள்ளப்பட்டது.

ஆக, இப்படி அங்கும் இங்குமாக உதிரியாகக் கிடைக்கும் செய்திகளிலிருந்து ஒரு யூகம் செய்வது தவறாக இருக்காது. வேத்தியல், பொதுவியல் என்று இருபிரிவுகள் கூத்தைப் பற்றிப் பேசப்படுகின்றன. நாட்டியம், நாட்டிய நாடகம், பாமர நாட்டிய நாடகம்—இவை தொன்று தொட்டு நம்மிடையே வழங்கி வந்திருக்க வேண்டும். பாமர நாட்டிய நாடக மரபின் ஒரு காலத் தொடர்ச்சியாகத்தான் பள்ளு opera வாக்கப்பட்டிருக்க வேண்டும். ஆகவே, நமக்குக் கிடைக்கும் முதல் 'நாடகம்' (theatre) ஒரு பாமர நாட்டிய நாடகம்—முக்கூடற்பள்ளு. 18-ம் நூற்றாண்டு பள்ளுவும், அதைத் தொடர்ந்து எழுந்த நொண்டி நாடகம், குறவஞ்சி ஆகிய மூன்றும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவை. எல்லாவற்றிலும் உள்ள கதை அம்சம் ஒன்றுதான். பெயர்கள், தொழுது ஏற்றும் தெய்வம் அல்லது வீரன்பெயர்கள் மாறுபடும். புகழ்ந்துபாடப் படும் ஸ்தலப் பெயர்கள் மாறுபடும். நாடக பாணியும் ஒன்றே இவையெல்லாம் அரசவையைச் சுற்றி, அல்லது கோவிலைச் சுற்றி எழுந்தவை, வாழ்ந்தவை. நம் சமூகம் அன்று சார்ந்திருந்த கோவில் கலாசாரத்தின் (Temple based culture) பிறப்புக்கள். மன்னனும் தெய்வத்தின் நிகராகக் கருதப் பட்டதால் தெய்வந்தொழும் பிரார்த்தனை முறையாக, கலா நிவேதனமாக (art as a votive offering to the gods) எழுந்த இம் மரபுகள், அரசனையும் புகழும் வழிமுறைகளாயின. கூத்து எனப்பட்ட இந்நாட்டிய நாடக மரபு கோயில் பிரகாரத்தைவிட்டு வெளியே வந்ததும் தெருக்கூத்து ஆயிற்று. இருப்பினும் தெருக்கூத்து, கோயிலில் தானிருந்த வகையிலிருந்து எவ்வகையிலும் மாறவில்லை. பரத சாஸ்திர விதிகளுக்குட் பட்டும், தங்கள் ஈடுபாட்டை ஒரு தெய்வ வழிபாட்டு முறையாகக் கொண்ட சிந்தனையோடும் அது தொடர்ந்து செயல்பட்டு வந்தது.

இதுவரைத்திய நாட்டிய நாடகங்களைத்தான் கூத்துக்களைத்தான் நாம் ஒரு கனமான கலாபூர்வமான நாடக மரபாகக் (theatre) கொள்ள வேண்டும். இப்போதைய நம்மவர்கள் நாடகம் என்று பேசும்பொழுது இக்கலா பூர்வமான மரபைக் குறித்துப்பேசுவதில்லை. மாறாக, இம்மரபின் பொது இயலாகப் பிறந்த விலாச நாடகங்கள் தொடங்கி வைத்த மரபைக் கருத்தில் கொள்கிறார்கள்.

சரித்திர நிர்ப்பந்தங்களால், சமூக நிலைகளின் மாற்றத்தால், கோயிலைச் சுற்றி எழுந்த கலாசாரம் சிதைபட ஆரம்பித்ததும், தெய்வத்திடமிருந்து நகர்ந்து அரசனுக்கு வந்து, அங்கிருந்தும் நகர்ந்து பிரபுக்கள், கொள்ளைக்காரர்கள், வீரர்கள் ஆகியோர் சமூகத்தின் கவனத்திற்கும் பிரமிப்பு கலந்த மரியாதைக்கும், புகழுக்கும் உரியவர்களானார்கள். ஒரு புதிய நாடக மரபு, வரலாறு, இங்கு தொடங்குகிறது—

விலாசம் நாடகங்கள். இன்றைய 'நாடக' சரித்திரத்தின் ஆரம்பம் இவை. நம் பழைய நாட்டிய நாடக மரபின் அந்திம அத்தியாயம். விலாச நாடகங்கள் அடி யெடுத்துவைத்த காலத்திலிருந்து, தமிழ் நாட்டில் நாடகத்தைக் கலையாகக் காண முடியாது போய்விட்டது. தெய்வத்தி னின்று நகர்ந்து பணக்காரனையும், பிரபு வையும், கொள்ளைக்காரனையும் புகழ்ந் தேத்தியதுபோல, கவிதையிலிருந்து நகர்ந்து விலாசம் நாடகங்கள் பாட்டிலும், பாட்டிலிருந்து நகர்ந்து, பாட்டு—வசனம் கலப்பிலும் பின்னர் வசனத்திலும் தஞ்ச மடைந்தன. கலையும் பிரார்த்தனையுமான ஒன்று, கதையும் கேளிக்கையுமாக மாறி யது.

ஆனால் இன்று நாடகாசிரியர்களும், நாடக ஈடுபாட்டில் இருப்பவர்களும், நம் பழம் நாடக மரபுப் பெருமைகளைப் பற்றிப் பேச ஏதோ ஒப்புக்கு பழம் நாட்டிய நாடக மரபுகளைச் சரித்திரச் செய்திகளாக நமக்கு நினைவூட்டுகிறார்கள் என்றாலும், இவர் களது இன்றைய 'நாடக' ஈடுபாடுகளுக் கும், கலாபூர்வமான பழம் நாட்டிய நாடக மரபுகளுக்கும் ஏதும் உறவு கிடையாது. இவர்கள் மரபின் உண்மையான தொடக் கம் விலாசம் நாடகங்கள்தாம். அவற் றிற்கு முன் சென்று விட்டால், கிடைக்கும் மரபுகள் இவர்களுக்குப் பிறிதான கலா மரபுகளாகிவிடும். சங்கரதாஸ் சுவாமிகள், சுந்தரம்பிள்ளை, ப. சம்பந்தம் முதலியார், கன்னையா, நவாப் ராஜமாணிக்கம், டி. கே எஸ். பிரதர்ஸ், சேவா ஸ்டேஜ், விவேகா னந்தா ஃபைன் ஆர்ட்ஸ் (டம்பாச்சாரி விலாசம்; 'சோ'வின் முன்னோடி) மனோகர் குழு - எல்லாமே விலாசம் நாடகங்களின் வழி வந்த சந்ததிகள்.

நம் சீரிய நாடகக் கலை மரபின் (நாட் டிய நாடகம், கூத்து) இன்றைய சந்ததி களாக, மெலட்டூர் பாகவத மேளாவையும், அடையாறு கலாக்ஷேத்திரத்தையும், புரிசை கிராமத்து வீரஸ்வாமித்தம்பிரான் வழி வந்த நடேசத்தம்பிரான் குழுவின் தெருக் கூத்தையும் தான் சொல்ல வேண்டும். தமி ழில் நாடகம் ஒரு கலாமரபாக இவற்றில் தான் உயிர்வாழ்கிறது.

தமிழ் இலக்கிய மறுமலர்ச்சி காலத் தில், கடந்த முப்பதுக்களில், நாற்பதுக் களில் சிறுகதையாசிரியர்கள், நாடகாசிரியர் கள் எல்லோரும் நாடகம் எழுதத் தொடங் கிய போதும் நாடகம் பிறக்கவில்லை. சிறு கதைகள்தான்நாடகம்எனப்பெயரிடப்பட்டு நமக்கு அளிக்கப் பட்டன. அவற்றையெல் லாம் அவர்கள் நாடகம் என்று சீரியஸாக உரிமை கொண்டாடவில்லை என்பதையும் சொல்ல வேண்டும். உரிமை கொண்டாடப் பட்ட, மேடையேறிய 'நாடகங்களும்' எல் லாமே சற்றுக் கவனித்தால், அவை பழங் கால 'நொண்டி' நாடகங்களாகக் காணப் படும். தி. ஜானகிராமன், பி. எஸ். ராமையா, டி. கே. எஸ்., சேவா ஸ்டேஜ் ஆகியோரெல்லாம் எழுதிய, மேடையேற் றிய நாடகங்கள் பெரும்பாலானவை நொண்டி நாடகங்கள். நொண்டி நாடகங் களில் கதாநாயகன் ஒரு வில்லனாக இருப் பான். அவனிடம் எல்லாத் தீய குணங் களும் இருக்கும். கடைசியாக அவன் வீழ்ச்சி அடையும்போது, ஒரு நல்ல மனிதன் குறுக் கிட்டு, நற்குணங்களின் பெருமையை அவ னுக்குச் சொல்லி, நீதிபோதித்து, இன்ன தெய்வத்தைத் தொழு, உன் அல்லல்கள் நீங்கும் என்று உபதேசிப்பான். பின், அத் தீயவன் நல்லவனாகமாறி இக பர சௌபாக் கியங்கள் சகலமும் பெற்று விடுவான். இதுவரை நாம் கண்ட தமிழ் நாடகங்கள் (பகுத்தறிவுப் பாசறை நாடகங்கள், உட் பட, தமிழ்நாட்டின் சிறந்த இலக்கியாசிரி யர்கள் எழுதிய நாடகங்கள் உட்பட,) எல் லாவற்றிலும், இந்நொண்டி நாடக அம் சங்கள் நிறைந்திருக்கும்.

ஆகவே, ந. முத்துசாமியின் 'காலம் காலமாக' 'அப்பாவும் பிள்ளையும்', 'நாற் காலிக்காரர்' ஆகியவை வெளிவரும்வரை தமிழ் இலக்கியத்தில் நாடகங்கள் இருந்த தில்லை. இந்திரா பார்த்தசாரதியின் 'மழை' டெல்லியில் மேடையேறியவரை தமிழில் நாடகங்கள் மேடையேறியதில்லை. தமிழில் மேடையேறிய முதல் நாடகம் 'மழை', இப் போது அச்சேறியிருக்கிறது.

இவர்கள் இருவரும்தான் கலாபூர்வ மான ஒரு நாடக மரபைத் தொடங்கியிருப் பவர்கள். இந்திரா பார்த்தசாரதியின் 'மழை' நம் மரபில் இல்லாத ஒரு புதுமை, மேற்கத்திய நாடக மரபின் பதியன். ஆர் தர் மில்லர், டென்னஸி வில்லியம்ஸ் ஆகி யோரின் வழி வந்தது, இந்நாடகம். நம் பழம் மரபான தெருக்கூத்து, mime மட்டு மல்ல, மேற்கத்திய theatre of absurd-க்கும் கூட — இரண்டு மரபுகளுக்குமே—சந்ததி, ந. முத்துசாமி.

'மழை' முதன்முதலாகத் தமிழ்நாட்டில் இன்றையநாடகச்சூழ்நிலையில் மேடையேறியிருக்க முடியாது. டெல்லியிலும் தமிழர்களிடையே அதே சூழ்நிலைதான். ஆனாலும் மற்ற பிராந்திய வாசிகளிடமிருந்து அடித்த காற்று, ஒரு டெல்லி தமிழ் நாடகக் குழுவினரைக் கொஞ்சம் உரசிச் சென்றிருக்கிறது. இன்னமும், 'மழை' இங்குள்ள தமிழர்களின் ரசனையை நம்பி மேடையேறவில்லை. Invited audience க்காக ஓர் முறை, ஒரு பரிசுப் போட்டியில் கலந்துகொள்ளும் வகையில் ஒரு முறை. அவ்வளவே. இவை 'மழை' மேடையேறக் காரணமாக இருந்த சாதகங்கள், எழுதப் பெறக் காரணமாக இருந்த சாதகங்களும் உண்டு.

நாடகம் என்ற கலா ரூபத்தை, இலக்கிய ரூபத்தை நம் இலக்கியாசிரியர்களும் சரி, நாடக மேடையோடு சம்பந்தப் பட்டவர்களும் சரி, இனம் கண்டு கொள்ளவே இல்லை. நாடகம் என்ற சாதனம் அவர்கள் பிடிக்கு உட்பட மறுக்கிறது. அதனால்தான் சிறுகதைகளும், தொடர்கதைகளும் நாடகங்களாக உலவுகின்றன.

இதிலும் ஒரு விசித்திரமான விதிவிலக்கு. நாடக ரூபமான ஒரு கதைக்கரு, குறு நாவலாகத்தான் பிரசுர வாய்ப்புப் பெறும் சூழ்நிலை, நிர்ப்பந்தம். (ஜெயகாந்தனின், 'ஆடும் நாற்காலிகள் ஆடுகின்றன') ஜெயகாந்தனுக்கு, நாடகத்தைப் பற்றிய இலக்கிய ரூப உணர்வு, கலா உணர்வு இருந்த போதிலும் கூட, அவருக்கு இருக்கும் பிராபல்யம், புகழ்கூட, இன்றுள்ளதாகச் சொல்லப்படும் நாடக மலர்ச்சிக் காலத்தில் கூட, அது நாடகமாக எழுதப் பெறவோ, மேடையேறப் பெறவோ உதவவில்லை.

இன்னும் ஒரு விசித்திரமான விதிவிலக்கு. ஓர் ஆரோக்கியமான இலக்கியக் கலாச் சூழ்நிலையில் இந்திரா பார்த்தசாரதி பிராதானியமாக ஒரு நாடகாசிரியராகவே ஆகியிருக்க வேண்டியவர். அவர் கதைகருக்கள் பெரும்பாலும் நாடக ரூபத்தில் தான் சிறப்பாக வெளிப்பாடு பெறும் தன்மையுடையவை. 'தந்திர பூமி' இன்னும் சற்று நீளத்தில் சுருங்கி நாடகமாயிருக்க வேண்டிய கதை. நாடக ரூபத்தில், அதன் கட்டமைப்பில் Brecht ன் நாடகங்கள் போன்றதாக (episodic) இருந்திருக்கும். 'வேஷங்கள்' தொகுதியில் வந்துள்ளவையும் ஓரங்க நாடகங்களாகக் கிடைத்திருக்க வேண்டியவை, குறு நாவல்களாக எழுதப்பட்டுள்ளன. எல்லாவற்றிற்கும் மேலாக, திரும்பவும், குறுநாவலாக எழுதப்பட்டுள்ள 'உச்சி வெயில்' நமக்கு உண்மையிலேயே ஒரு சிறந்த நாடகமாகக் கிடைத்திருக்க வேண்டியது. Arthur Millerன் After the Fall போன்ற ஒரு கட்டமைப்பையும் ரூபத்தையும் அது பெற்றிருந்திருக்கும்.

இதுதான் நம் சூழ்நிலையின் அவலம். யார் யாரோவெல்லாம் எதையெதையெல்லாமோ எழுதி நாடகம் என்கிறார்கள். இயல்பான நாடகாசிரியர்கள், நாடகங்களை வேறு ஏதேதோவாக எழுதுகிறார்கள். ஆனாலும் நாடகம் எழுத ஒரு தூண்டுதலும், சந்தர்ப்பமும் ஒரு இயல்பான நாடக கர்த்தாவுக்குக் கிடைக்கும்போது 'மழை' பிறந்து விடுகிறது, இதைத்தான் நாடகம் எழுதக் கிடைத்த சாதகக் காரணம் என்றேன். இந்திரா பார்த்தசாரதி தன் எழுத்தின் இனத்தைக் கண்டு கொள்ள வேண்டும்.

மேடையேறிய முதல் நாடகம் என்பதற்கும் மேலாக இன்னொரு புதிய குணமும் 'மழை'யில் உண்டு. அது இவர் எழுத்துக்களில் எல்லாம் பொதுவாகக் காணப்படும் குணம், Cynicism, நம்பிக்கையின்மை. நாம் புனிதமாகக் கருதும் பலவற்றில் மரியாதை இன்மை; முந்திய தலைமுறையும், சுற்றியுள்ள உலகமும் கொடுக்கும்எதையுமே, அப்படியே பெற்றுக் கொள்ள ஒரு மறுப்பு. இவ்வகையில், பிராபல்யமான தமிழ் எழுத்தாளர்களின் இடையில், இந்திரா பார்த்தசாரதி தனித்துக் காண்பவர்.

டெல்லித் தமிழர்களுக்கு 'மழை' எவ்வளவு அதிர்ச்சியையும் அருவருப்பையும், கசப்பையும், கொடுத்துள்ளது என்பதை நான் காண முடிந்தது. எவ்வளவு 'சீச்சீ'க்கள்! எவ்வளவு புருவ நெளிவுகள்! எவ்வளவு முகக் கோணல்கள்! அவ்வளவிற்கு இந்நாடகம் ஒரு வெற்றிதான், அதிர்ச்சிக்குப் பிறகு சிந்திக்கும் திடமனதிருந்தால் சிந்தனைக்கு வாய்ப்பு இதில் நிறையவே உண்டு.

'மழை' என்ன ஒரு நாடகமா? இதில் நாடகம் எங்கே இருக்கிறது? டாக்டர்

ஜேம்ஸ் நிர்மலாவைக் கல்யாணம் செய்து கொண்டிருக்க வேண்டும், அப்போது நாடகம் இருந்திருக்கும், என்று சிலர் சொன்னார்கள். அவர்களுக்கெல்லாம் பதில்: ஒரு சிக்கலான நிலைமை, பல குணசித்திரங்களின் மோதல்—இது ஓர் நிலைமை. இதில் சிக்கல் உண்டு, மோதல் உண்டு என்று இனங் காட்டுவதே நாடகத்தில் போதும். சிக்கலும், மோதலும்தான் நாடகம், அவற்றின் தீர்வு இல்லை என்று எனக்குத் தோன்றுகிறது.

ஆனால் இலக்கியாசிரியராக (நாடகக் கர்த்தராக அல்ல) இந்திரா பார்த்தசாரதியிடம் காணும் ஒரு குணத்தைப் பற்றியும் சொல்ல வேண்டும். அவர், தன் Cynicism, irreverance இவற்றுடன் கடைசிவரைச் செல்வதில்லை. தந்திர பூமியில் கஸ்தூரி, கடைசியில், சம்பிரதாய மதிப்புகளின் குறியீடாக நிற்கும் மீனாவிடம் சரணடைந்து விடுகிறான். 'உச்சி வெயில்'-ல் இரு தலைமுறைகளின் சந்திப்பில் ஒரு சிக்கல் எழுந்ததும், பழந் தலைமுறையின் பிரதிநிதியாக இருக்கும் தந்தை இறந்து விடுகிறார். 'வேஷங்கள்' சங்கரனுக்கு, ரமணியின் அம்மாவிடம் ஓர் திடீர் ஆசை பிறந்து, பிரச்னையே வேறாக மாறிவிடுகிறது. 'மழை' யில் எள்ளி நகையாடப்படும் டாக்டர் ஜேம்ஸின் Nobility-யில் இந்திரா பார்த்தசாரதி போற்றும் மதிப்பு ஒன்று ("வாழ்க்கையிலே நல்ல அம்சமும் இருக்குன்னு நம்ப மறுக்கிற பிடிவாதம்; என்னிக்காவது நீங்க இரண்டு நாய்க் குட்டி விளையாடுகிறதையோ, ஒரு குழந்தை சிரிக்கிறதையோ பார்த்து ரஸிச்சிருக்கீங்களா?') கண்டு பிடிக்கப் படுகிறது. தன் இயல்பான Nobility நிர்மலா எழுப்பும் பிரச்னைக்கு எவ்வித முடிவுகாணும் என்று அவரோ, நாமோ தெரிந்துகொள்ள இயலாத வகையில் ஒரு காலரா சம்பவம் இடை புகுந்து பிரச்னையையே வேறொன்றாக்கி விடுகிறது.

இதற்கு என்ன காரணம்? எனக்குத் தோன்றுகிறது, நாம் வாழும் ஓர் இடைக் கால (transitional times) சூழ் நிலையில், உருத் தெளிவில்லாத மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும் நிலையில் ஒவ்வொரு சிந்தனை வாதியும் உட்படும் குழப்பம் தான் என்று. பழைய மதிப்புகளில் நம்பிக்கையில்லை. அவற்றை உதறி விட்டு வேறு புதிய மதிப்புகளின் துணையுடனோ, மதிப்புகளே அற்று, அனுபவங்களை நேராக எதிர்நோக்கும் சிந்தனையுடனோ வாழ்க்கையைத் தொடங்கிகொஞ்ச தூரமே சென்று அதற்கு மேற் செல்ல வழி தெரியாமலோ, குழம்பியோ, பின் மறுபடியும் பழைய மதிப்புகளில் தஞ்சமடைவது இந்தக் காலத்தின் நிர்ப்பந்தம் போலும்.

கடைசியாக, 'மழை'யின் நாடக அமைப்பு, மேடையுத்திகள் பற்றிச் சில வார்த்தைகள். நம் இன்றைய நாடகச் சூழ்நிலையில் 'மழை' ஒரு புரட்சி, புதுமை என்று என்னென்னவாகவெல்லாமோ தோன்றலாம் 'மழை', ஒரு நேரான, சம்பிரதாய, மூன்றங்க நாடகம், நடிப்புமுறைகளிலோ, மேடையேற்ற உத்திகளிலோ எத்தகைய சிரமத்தையும், புதுமைகளையும் தராதது. நமக்குத்தான், நாம் கண்மூடித்தனமாக வளர்த்துள்ள மரபுகளுக்குத்தான் இது வேற்றுமையானது, புதுமையானது. 'மழை' போன்ற நாடகங்கள் நிறைய எழுதப் பெற்றுத் தமிழ் நாட்டில் மேடையேறி, இப்போதைக்கு 'மழை' தரும் புதுமைத் தோற்றமும் புரட்சியும்மறைந்து சம்பிரதாயமாக (Conventional) ஏற்றுக் கொள்ளப்படும் சூழ்நிலை தமிழ் நாட்டில் ஏற்படக் கூடுமானால், அப்போது ந. முத்து சாமி எழுதியுள்ள நாடகங்கள் ஏற்றுக் கொள்ளப்பட, மேடையேற வழி வகுக்கப் பட்டுவிடும். ந. முத்துசாமி மிகவும் சிரமம் தரும் நாடகாசிரியர். அவர் நாடகங்களை மேடையேற்றும் தயாரிப்பாளருக்கு, நாம் இப்போது நாடகக் கலை மரபாக ஒப்புக் கொள்ள மறுக்கும், கலாப் பாரம்பரியமான தெருக் கூத்து, mime ஆகிய மரபுகளைப் பற்றியும், நன்கு தெரிந்திருக்க வேண்டும். Theatre of the Absurd பற்றியும் நன்றாகத் தெரிந்திருக்க வேண்டும், நடிகர்களுக்கும் இப்பல்வேறு நடிப்புப் பாணிகளும் தெரிந்திருக்க வேண்டும். முத்துசாமியின் நாடகங்களில் இப்பலரக மரபுகளின் ஒன்றிணைவு (Fusion) சாதனையாகியுள்ளது. இவற்றைப்பற்றியெல்லாம் தமிழ் நாடக உலகம் இந்திரா பார்த்தசாரதியை நாடகாசிரியராக ஒப்புக்கொண்ட பிறகு, அவரைப் போன்ற இன்னும் பலர் தோன்றிய பிறகு, சாவகாசமாகப் பேசிக்கொள்ளலாம். இப்போதைக்கு 'மழை' ஜீரணிக்கப்படட்டும்.

'மழை', தமிழ் நாடக இலக்கியத்தில் நாடகக் கலை மேடையில் ஒரு புதிய மரபைத் துவக்கி வைக்கிறது.

**வெ. சாமிநாதன்**

# மழை

## இந்திரா பார்த்தசாரதி

### காட்சி 1

பாத்திரங்கள்:

ப்ரொஃபஸர் சந்திரசேகர்—வயது 65. கல்லூரியிலிருந்து ஓய்வெடுத்துக் கொண்ட தத்துவப் பேராசிரியர். இருதய நோய்க்குள்ளானவர்.

நிர்மலா—அவர் பெண். வயது 30.

டாக்டர் ஜேம்ஸ்—வயது 40. மருதூர் கிராமத்தில் பதினைந்து வருஷமாக இருந்துவரும் மருத்துவர்; அவ்வூர் மக்களுடைய அபிப்பிராயத்தில் உயர்ந்தவர்.

நேரம்: ஒளி மங்கி வரும் மாலை நேரம்

காலம்: நிகழ்

இடம்: தஞ்சாவூர் மாவட்டத்தில் ஒரு கிராமம்—மருதூர்

(திரை விலகும்போது மங்கிய ஒளியில் கிராமத்திலிருக்கும் வசதியான குடும்பத்தின் வீட்டு 'ஹால்' தெரிகிறது.

அரங்கத்திலிருந்து வலப்பக்கத்தில் சுவரை ஒட்டிப் போடப்பட்ட வெள்ளை நிறமான ஒரு மரக் 'காபினெட்'. (ஆஸ்பத்திரியில் இருப்பது போல) மருந்துப் புட்டிகள் பல அதில் இருக்கின்றன. காபினெட்டின் மேலே ஒரு ஃப்ளாஸ்க், 'ஹாட் வாட்டர் பாக்'. அரங்கத்திலிருந்து வலப்பக்கமாக, மரக்காபினெட்டைச் சற்றுத் தள்ளி, உள்ளே போகக் கதவு. சற்று இடப்புறமாகத் தள்ளி சுவரில் அரங்கத்தின் நடுமத்தியில் ஒரு பெரிய ஜன்னல். கதவுகள் மூடியிருக்கின்றன.

ஹால் மத்தியில் முன்புறமாக சோபா, நாற்காலிகள், டீபாய். அரங்கத்திலிருந்து இடப்பக்கத்தில் நீள வடிவில் அமைந்த கண்ணாடிக் கதவுகளுடன் கூடிய ஒரு புத்தக அலமாரி... அடுக்கடுக்காய்ப் புத்தகங்கள். அலமாரியின் மீது பல ஆங்கில, தமிழ்ப் பத்திரிகைகள் தாறுமாறாய்க் கிடக்கின்றன,

அலமாரியின் மேல், சுவரில், ஒரு புகைப்படம் மாட்டியிருக்கிறது. அதிலுள்ள பெண்மணிக்கு முப்பது வயதுக்குள்தானிருக்கும். படம் ஒரு பக்கமாகச் சற்று சரிந்திருக்கிறது. சந்திரசேகருடைய மறைந்த மனைவி.

மரக்காபினெட் அருகே சரீரம் முழுவதையும் கிடத்திக் கொள்ளும்படியான ஸ்டீல் சாய்வு நாற்காலி. ப்ரொஃபஸர் சந்திரசேகர் படுத்திருக்கிறார். வழுக்கை விழாத, பெட்ராண்ட் ரஸ்ஸல் கிராப், தடித்த 'ப்ரேம்' போட்ட கண்ணாடி. அரைக்கை பனியன், வேட்டி.

திரை விலகும்போது அவர் கண்கள் மூடியிருக்கின்றன. மார்பின் மீது பாதி திறந்த ஒரு தடித்த புத்தகம் கிடக்கிறது. படிக்கும்போதே தூங்கியிருக்க வேண்டும். திரை விலகும்போது, நிர்மலா சோபாவில் படுத்துக் கொண்டிருக்கிறாள். ஹால் நிசப்தமாக இருக்கிறது.

திரை விலகி, இரண்டு நிமிஷ நேர இடைவெளிக்குப் பிறகு, வாசல் கதவு தட்டப்படும் சப்தம். முதல் சப்தத்தில் யாரும் எழுந்திருக்கவில்லை. மறுபடியும் இரண்டாம் முறை சற்றுப் பலமாகத் தட்டப்படுகிறது. நிர்மலா எழுந்திருக்கிறாள். லேசாகக் கண்களைக் கசக்கிக் கொண்டு தலைமயிரைக் கோதிக் கொள்கிறாள். சரிந்து விழும் புடவைத் தலைப்பைச் சரி செய்து கொள்ளுகிறாள்.

மூன்றும் முறையாகக் கதவு தட்டப்படுகிறது. ப்ரொஃபஸர் சந்திரசேகர் ஒருவித நடுக்கத்துடன் விழித்துக் கொண்டு வாசலை (அரங்கத்திலிருந்து இடப்பக்கம்) நோக்குகிறார்.

நிர்மலா எழுந்து சென்று விளக்கைப் போடுகிறாள். விளக்குஒளி கூசவைப்பதினால் கண்களைக் கொஞ்சம் இடுக்கிக் கொள்கிறார் சந்திரசேகர்.

நிர்மலா கதவைத் திறக்கிறாள்.

டாக்டர் ஜேம்ஸ் உள்ளே நுழைகிறார். நல்ல உயரம். இரட்டைப் பை வைத்த கதர் புஷ்ஷர்ட். வேட்டி. கையில் டாக்டருக்குரிய பை. சுலபமான புன்னகை.

ஜேம்ஸ் உள்ளே நுழைந்ததும், சந்திரசேகர் கண்களை மூடிக் கொள்கிறார்.

நிர்மலா நல்ல சிகப்பு. புறத்தோற்றத்தில் உறுதியும், தன்னம்பிக்கையும் தென்பட்டாலும், அவளை ஊன்றிக் கவனிக்கும்போது லேசாக ஒரு நிலை கொள்ளாத் தன்மையும், கண்களில் சுபாவமான சஞ்சலமும் புலப்படும்.)

ஜேம்ஸ்: அவசரமா கூப்பிடனுப்சிங்க, விளக்குகூட போடாமெ...வீடு இருண்டு கிடக்குதே!.. அதுக்குள்ளாறவா தூக்கம்?...

நிர்மலா: இருட்டுக்கு ஒரு நேரமுண்டா? அவாவா மனசைப் பொறுத்தது...
(மேலே நடக்காமல் ஒரு கணம் நிற்கிறார் ஜேம்ஸ். அவளை உற்றுப் பார்க்கிறார்)

ஜேம்ஸ்: இருட்டை இப்பொ வரவேற்கக் காரணம்?...

நிர்மலா: (புன்னகையுடன்) நீங்க என்ன இருட்டா?...

ஜேம்ஸ்: கெட்டிக்காரத்தனமான பதில்தான்...ஆனா கெட்டிக்காரத்தனத்தைக் கண்டா எனக்குப் பயமா இருக்கு...

நிர்மலா: என்ன பயம்?
(ஜேம்ஸ் கையிலிருக்கும் பையைக் கீழேவைத்துவிட்டு, சுவரில் சற்றுச் சாய்ந்திருக்கும் புகைப் படத்தை நோக்குகிறார்)

ஜேம்ஸ்: (நோக்கிக் கொண்டே) கெட்டிக்காரத்தனங்கிறது ஒரு கவசம்...விஷயத்தைக் குழப்பவோ இல்லாட்டி மறைக்கவோ அதை உபயோகப்படுத்திக்கலாமில்லியா?...

நிர்மலா: நான் எதையோ மறைக்கிறேன்னு அர்த்தமா?

ஜேம்ஸ்: (புன்னகையுடன்) எனக்குத் தெரியாது...நான் ஒரு பட்டிக்காட்டு டாக்டர். நாஸுக்கான விஷயங்களைப்பத்தி எனக்கு என்ன தெரியும்?

(அவர் கீழே வைத்திருக்கும் பையை எடுத்துக் கொள்கிறார்)

நிர்மலா: எனக்கு உலகத்திலே பிடிக்காத விஷயம்...
(அவள் மேலே சொல்லாமல் நிறுத்துகிறாள். அவள் அலமாரியின்மீது கிடக்கும் பத்திரிகைகளை ஒழுங்காக அடுக்குகிறாள்)

ஜேம்ஸ்: எஸ்...சொல்லுங்க...பிடிக்காத விஷயம் என்ன?

நிர்மலா: தன்னைக் கண்டு தானே பரிதாபப்படறது...ஐ மீன் செல்ஃப் பிட்டி.

ஜேம்ஸ்: ஆல்ரைட்...எதுக்காக அவசரமா ஆளை அனுப்சிங்க? அவருக்கு எப்படி இருக்குது? (டாக்டர் சந்திரசேகரைப் பார்க்கிறார். அவர் கண்கள் மூடி இருக்கின்றன)

நிர்மலா: நீங்களே போய்ப் பாருங்க...அவரோட பேசிப் பாத்தாதான் எனக்கு எவ்வளவு பொறுமை இருக்குன்னு உங்களுக்குப் புரியும்.

(ஜேம்ஸ் சந்திரசேகர் பக்கம் நோக்கிச் செல்கிறார். அங்கிருக்கும் மோடா ஒன்றை இழுத்துப் போட்டுக் கொண்டு அவரருகில் உட்காருகிறார்)

ஜேம்ஸ்: ஹௌ ஆர் யு, ப்ரொஃபஸர்?

(சந்திரசேகர் கண்களைத் திறந்து புன்னகை செய்கிறார். பதில் சொல்லவில்லை. கைப்பையைத் திறந்து ஸ்டெதஸ்கோப், இரத்த அழுத்தத்தைக் காட்டும் கருவி ஆகியவற்றை எடுக்கிறார்)

ஜேம்ஸ்: அந்த ஜன்னலைத் திறந்து வைங்க...

நிர்மலா: ஜன்னலையா!...அப்பாதான் திறக்க வேண்டாங்கிறார்.

ஜேம்ஸ்: வெளிக்காத்து உள்ளே வரவேண்டாமா!...

நிர்மலா: உள்ளேருந்தும் காத்து வெளியிலே போகவேண்டாம்னு அவர் அபிப்பிராயமா இருக்கலாம்...

(ஜேம்ஸ் 'போதும் இந்த மாதிரியான பேச்சு' என்பது போல் அவளைப் பார்க்கிறார். தானே எழுந்து சென்று ஜன்னல் கதவுகளைத் திறக்கிறார். ஜன்னலுக்கப்பால் கிராமத்துச் சூழ்நிலை. வயல்வெளி, ஓடை...முதலியன நிலா வெளிச்சத்தில் தெரிவது போல் தெரிய வேண்டும்...

ஜேம்ஸ் சந்திரசேகர் அருகில் வந்து மீண்டும் உட்காருகிறார்)

ஜேம்ஸ்: இப்பொ எப்படி ஃபீல் பண்றிங்க?
(அவர் ஸ்டெதஸ்கோப்பினால் அவரைப் பரிசோதனை செய்கிறார்)

ச. சே. இதுக்கு என்ன பதில் சொல்லணும்னு எதிர்பார்க்கறேள்? எவரெஸ்ட் உச்சியிலே உட்கார்ந்திருக்கேன்னு சொல்லட்டுமா?...

(ஜேம்ஸ் ஸ்டெதஸ்கோப்பைக் கழுத்தில் மாட்டிக் கொண்டு, இரத்த அழுத்தம் அறிவதற்காகக் கையில் துணியைக் கட்டுகிறார்)

நிர்மலா: எவரெஸ்ட் உச்சின்னு எதுக்காகச் சொல்லணும்? 'தந்தக் கோபுரம்'னு வேணும்னா சொல்லலாம்...

(ஜேம்ஸ் பேசவில்லை. இரத்த அழுத்தம் பார்த்துவிட்டுத் துணியை அவிழ்த்துவிட்டுக் கருவியை மூடி வைக்கிறார்)

ஜேம்ஸ்: இந்தக் கருவிக்குக் (இரத்த அழுத்தக் கருவியைச் சுட்டிக் காட்டுகிறார்) கெட்டிக்காரத்தனம் கிடையாது...குழப்பவோ, மறைக்கவோ செய்யாது.

நிர்மலா: பட்டிக்காட்டு டாக்டர் மாதிரி ஒரு அப்பாவி.

ஜேம்ஸ்: (சந்திரசேகரிடம்) உங்களே நான் எதுக்குமே அலட்டிக்கக் கூடாதுன்னு சொல்லியிருக்கேன்லே...நான் சொல்றதைப்பத்தி நீங்க கவலைப்படறதா தெரியலியே... நீங்களும் ஒத்துழைக்காட்டி மருந்து எப்படி வேலை செய்யும்?...

(சந்திரசேகர் ஒன்றும் பேசாமல் கண்களை மூடிக்கொள்கிருர்)

ஜேம்ஸ்: (நிர்மலாவிடம்) ஒரு வேளை, உங்களாலே இதுக்கும் பதில் சொல்ல முடியுமோ என்னவோ?...

நிர்மலா: சாட்சியைக் கையிலே வைச்சுண்டு பேசறதா அர்த்தமா?... (அவள் இரத்த அழுத்தக் கருவியைச் சுட்டிக் காட்டுகிருள்)

ஜேம்ஸ்: லுக் ஹியர், நிர்மலா... சாட்சியை வைச்சுண்டு குறுக்கு விசாரணை செய்ய நான் ஒண்ணும் வக்கீல் இல்லே...நான் ஒரு பட்டிக்காட்டு அப்பாவிதான்...ஐ அக்ரி......

நிர்மலா: அது நானு சொல்லலே...ஐ வாஸ் ஜஸ்ட் கோட்டிங்...

ஜேம்ஸ்: ஆல் ரைட்...யு ஜஸ்ட் கோட்டட்...பட் இவரை உணர்ச்சி வசப்படாமெ வைச்சுக்கிற பொறுப்பு, இவரோட மகங்கிற முறையிலே உங்களுக்கும் இருக்கு இல்லையா? ...இவருக்கு இப்பொ வேண்டியது, 'கம்ப்லீட் ரெஸ்ட்'...

(நிர்மலா பதில் சொல்லாமல் ஜன்னலருகே போய் நின்றுகொண்டு வெளியே பார்க்கிருள்)

ச. சே. யு ஆர் ரைட்...ஐ நீட் கம்ப்லீட் ரெஸ்ட். அது எப்பொ கிடைக்கும்?...அது என்ன சொல்றது?... (அவர் இரத்த அழுத்தக் கருவியைக் காட்டுகிருர்)

ஜேம்ஸ்: (சற்று திடுக்கிட்டு) ஐ ஆம் ஸாரி ப்ரொஃபஸர்...உங்க ரத்த அழுத்தம் சரியாத்தான் இருக்குது...பட்...ஐ மீன்...நீங்க எதுக்கும் ஜாக்கிரதையா இருக்கிறது நல்லதில்லையா?...

(ஜேம்ஸ் எழுந்து காபினெட்டில் இருக்கும் மருந்துகளை ஒவ்வொன்ருய்ப் பார்க்கிருர்)

ச. சே. ஏற்கனவே இரண்டு 'அட்டாக்' வந்தாச்சு...

(ஜேம்ஸ் அவர் பக்கம் திரும்புகிருர்)

ஜேம்ஸ்: இதுக்கு ஒண்ணும் கணக்குக் கிடையாது, ப்ரொஃபஸர்... ஐஸன்ஹோவருக்கு எவ்வளவு 'அட்டாக்' வந்தது தெரியுமா?

ச. சே: ஐ ஆம் நாட் ஐஸன்ஹோவர்... ஹி வாஸ் எ வெரி ஹாப்பி மான். அது கிடக்கட்டும்... ஐ ஹாவ் ஸம் நியூஸ்...

(ஜேம்ஸ் திரும்பி வந்து மோடாவில் உட்காருகிருர்)

ஜேம்ஸ்: ரியலி?...

(சந்திரசேகர் கீழே வைத்த புத்தகத்தை எடுத்து அதிலிருந்து ஒரு தந்தியை எடுத்து ஜேம்ஸிடம் நீட்டுகிருர்)

ஜேம்ஸ்: (தந்தியைப் படிக்கிருர்).. ஐ ஸி...இவர் யாரு, வரப்போறதா தந்தி அடிச்சிருக்காரே 'ப்ரம் பாங்ளூர்'...இட் மீன்ஸ்...

ச. சே: எஸ், இட் மீன்ஸ்...மை ஸன்...

ஜேம்ஸ்: உங்க பிள்ளையா?...ரொம்ப வருஷம் கழிச்சு பாக்கப் போறீங்க இல்லே?...

ச. சே: ஆமாம்...பத்து வருஷம் கழிச்சு...

(ஜன்னல் வழியாக வெளியே பார்த்துக் கொண்டிருந்த நிர்மலா இவர்களுடைய பேச்சினல் கவரப்பட்டதாகத் தெரியவில்லை. அவள் ஜேம்ஸிடம் வருகிருள்)

நிர்மலா: உங்களுக்கு என்ன வேணும், காஃபியா, டீயா?

ஜேம்ஸ்: ஸ்வீட்டும் கொண்டாங்க...உங்க அண்ணு வரப் போருரில்லே?

நிர்மலா: காஃபியா, டீயா டாக்டர்?

ஜேம்ஸ்: காஃபியே கொண்டாங்க...

(நிர்மலா அரங்கத்திலிருந்து வலப்பக்கமாகக் கோடியிலிருக்கும் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போகிருள்)

ச. சே: அவனுக்கு இப்பொ உங்க வயசு இருக்கும்...

ஜேம்ஸ்: ஐஸீ...பத்து வருஷம் கழிச்சுப் பாக்கிறீங்க, நீங்க உணர்ச்சி வசப்படறது ஆச்சர்ய மில்லே...யு பெட்டர் டேக் ஸம் ட்ரான்க்குலேஸர்...

ச சே: இத்தனே வருஷமா இரண்டு பேரும் ஒத்தரை ஒத்தர் பாக்காமெ இருந்ததுக்குக் காரணம் சொல்லியிருக்கேனு, டாக்டர்?

ஜேம்ஸ்: சொல்லியிருக்கீங்க...

(அவர் சந்திரசேகர் கையிலிருக்கும் புத்தகத்தை வாங்கிப் புரட்டிப் பார்க்கிருர்)

ச. சே: என்ன சொல்லியிருக்கேன்?

ஜேம்ஸ்: ஆமாம் (இழுத்துக் கொண்டே) இப்படிப் பெரிய பெரிய சைகாலஜி புஸ்தகங்களேப் படிக்கிறதும் ஒரு 'ஸ்ட்ரெயின்' தான்...திஸ் ஈஸ் நாட் கம்ப்லீட் ரெஸ்ட்...

ச. சே: டாம் மை ரெஸ்ட்...என்ன சொல்லியிருக்கேன் சொல்லுங்க...பேச்சை மாத்த வேணும்...

ஜேம்ஸ்: ஏதோ மனஸ்தாபம்னு சொல்லியிருக்கீங்க...அது கிடக்கட்டும்...அதெல்லாம் இப்போ எதுக்கு!...பழசை நினேச்சிக்கிட்டு மனசை உழப்பிக்காதீங்க...

ச. சே: நிர்மலா ஏதாவது சொன்னுளா?

ஜேம்ஸ்: நிர்மலாவா? அவங்க சொல்றதுக்கு என்ன இருக்கு?... அண்ணன் வரார்னு அவங் களும் சந்தோஷப் படத்தானே செய்வாங்க...

ச. சே: (கோரப் புன்னகையுடன்) மிஸ்டர் ஜேம்ஸ்...ஐ வாஸ நாட் பார்ன் எஸ்டர்டே... நிர்மலா எவ்வளவு பொறுமைசாலின்னு புரிஞ்சுக்க உங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் வேண்டாமா?

ஜேம்ஸ்: (லேசான அதிர்ச்சியுடன்) அண்ணன் வரார்ங்கிறதிலே நிர்மலாவுக்கு இஷ்டமில்லேங் கிறிங்களா?

ச. சே: (தோள்களேக் குலுக்கிக் கொண்டே) ஐ யாம் நாட் ஸேயிங் எனிதிங் (அவர் உள்பக்க மாகப் பார்க்கிருர்)

(நிர்மலா மூன்று கோப்பைகளில் காப்பியை ஒரு தட்டில் எடுத்துக் கொண்டு வரு கிருள். ஜேம்ஸ் ஒரு கோப்பையை எடுத்துக் கொள்கிருர். சந்திரசேகர் அருகிலி ருக்கும் காபினெட்டில் ஒரு கோப்பையை வைத்துவிட்டு தான் ஒரு கோப்பையுடன் ஜேம்ஸ் எதிரே ஒரு மோடாவில் உட்காருகிருள் நிர்மலா)

ஜேம்ஸ்: (நிர்மலாவிடம்) உங்க அண்ணு வரப்போருராமே, ஸம் ஹாப்பி நியூஸ்.

நிர்மலா: காஃபி எப்படி இருக்கு? இஸ் இட் ஆல் ரைட்?

ஜேம்ஸ்: சர்க்கரை கொஞ்சம்கூட இருக்குது...தாங்க் காட் ஐ ஆம் நாட் டையபிடிக்...

நிர்மலா: நீங்கதானே 'ஸ்வீட்' கேட்டேள்...

(ஜேம்ஸ் பதில் கூருமல் காஃபியைக் குடித்துவிட்டுக் கோப்பையைக் கீழே வைத்துக் கொண்டே அவளே உற்றுப் பார்க்கிருர்)

ச. சே: அவனைப் பார்த்தா இப்போ எப்படி 'ரியாக்ட்' பண்றதுன்னு புரியலே, டாக்டர்...தந்தியைப் பார்த்த உடனே, ரிஃப்லக்ஸ் ஆக்ஷன்' மாதிரி சந்தோஷமா இருந்ததுன்னு என்னுலே மறுக்க முடியாது...

நிர்மலா: (ஏளனமாக) அவர் சந்தோஷத்திலே பங்கு கொள்ளத்தான் உங்களைக் கூப்பிட்டனுப்சேன்.

(அவள் இதைச் சொல்லிவிட்டு எழுகிருள்)

ச. சே: அவன் என்னை விட்டுப் போறப்போ, அதான் பத்து வருஷத்துக்கு முன்னுலே சொல்றேன்...என் பேரிலே நூத்தெட்டுப் பழியைச் சுமத்திட்டு போனுன்...பொண்ணுதான் வேணுங்கிறதுக்காகப் பிள்ளையை உதாசினம் பண்றேன்னு ஒரு பழி...இட் அல்மோஸ்ட் ஸவுண்டட் லைக்...இன்ஸெஸ்ட்...

ஜேம்ஸ்: மை காட்...என்ன சொல்றீங்க இப்படி?...

நிர்மலா: (ஏளனமாக) எ குட் கிறிஸ்டியன் ஈஸ் ஷாக்ட்...

(அவள் இதைச் சொல்லிவிட்டுச் சோம்பல் முறிக்கிருள்)

ச. சே: நான் ஒண்ணும் சொல்லலே டாக்டர்...என் பையன் அப்பொ சொன்னத்தைச் சொன்னேன்...அவ்வளவுதான்...பட்...இப்பொ எனக்கு அவன் பேரிலே கோபமே இல்லே...

(அவர் நிர்மலாவைப் பார்க்கிருர். அவள் அவரைப் பார்க்காமலேயே காப்பியைக் குடித்துவிட்டுக் கோப்பையைத் தட்டில் வைக்கிருள். ஜேம்ஸ் குடித்துவிட்டு கீழே வைத்த கோப்பையையும் தட்டில் எடுத்து வைக்கிருள். சந்திரசேகர் இன்னும் காப்பி குடிக்கவில்லை...)

ஜேம்ஸ்: காஃபி குடிங்க, ஆறிடப் போவுது...

(அவர் காஃபியை எடுத்து சந்திரசேகரரிடம் கொடுக்கிருர்)

ச. சே: ஆறிப் போயாச்சு...ஐ லைக் திஸ் நெள.

(நிர்மலா அவர் கீழே வைத்த கோப்பையைத் தட்டில் எடுத்து வைத்துக்கொண்டு உள்ளே போகிருள்)

ஜேம்ஸ்: ஆமாம், நிர்மலாவையும் வைச்சுக்கிட்டு நீங்க என்ன இப்படி...'இன்ஸெஸ்ட்', அது இதுன்னு பேசுறீங்க?...நல்லாயில்லேலே...

(அவர் இரத்த அழுத்தக் கருவி, ஸ்டெதஸ்கோப் ஆகியவற்றைக் கைப்பையில் வைத்துப் பையை மூடுகிருர்)

ச. சே: (நிதானமாக, அழுத்தமாக) அண்ணன் பத்து வருஷத்துக்கு முன்னுலே சொன்னதை, தங்கை இப்பொ சொல்ரு...அவளை 'வைச்சுகிட்டு'ப் பேசறது தப்பாப் போச்சா?...

(ஜேம்ஸ் பையை மூடிக் கொண்டிருந்தவர் சற்றுத் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்க்கிருர்)

ஜேம்ஸ்; வாட் டு யு மீன்?...

ச. சே: நிர்மலாவை இன்னெருத்தன் சொந்தம் கொண்டாடக் கூடாதுங்கிற பொருமை உணர்சியினுல்தான், அவ கல்யாணத்துக்கு நான் தடையா இருக்கேங்கிறது, அவளோட அபிப்பிராயம், இதை இன் டேர்ம்ஸ் ஆஃப் ஸைகாலஜியிலே சொல்லப் போனு... ஐ ஹோப் யு அன்டெர்ஸ்டான்ட்...

(ஜேம்ஸ் சிறிது நேரம் பேசாமலிருக்கிருர்)

ஜேம்ஸ்: உங்க சம்ஸாரம் தவறிப் போய் எவ்வளவு வருஷமாறது ப்ரொஃபஸர்? (அவர் சுவரிலுள்ள புகைப்படத்தைப் பார்த்துக் கொண்டே கேட்கிருர்)

ச. சே: எதுக்குக் கேக்கிறீங்க? நான் வக்கரமானவன் இல்லே, டாக்டர், யு கேன் டேக் மை வேர்ட்...

(அப்பொழுது நிர்மலா வருகிருள். சிறிது நேரம் மௌனம். நிர்மலா ஜேம்ஸ் எதிரே நின்று கொண்டு மருந்துப் புட்டிகளைச் சிந்தனையில் லயித்தவாறு அங்குமிங்கும் நகர்த்துகிருள்)

நிர்மலா: உட்ரோ வில்சனைப்பத்தி ஃப்ராயிடோட ரிஸர்ச் பேப்பர் சமீபத்திலே படிச்சேன் டாக்டர்.

ஜேம்ஸ்: ஐ ஸீ...

நிர்மலா: (சிறிது மௌனத்துக்குப் பிறகு) உட்ரோ வில்ஸனுக்குத் தன் பேரிலேயே அசாத்ய பிரியமாம். அதைக் கஷ்டப்பட்டு மத்தவா பேரிலே, மனிதாபிமானம், அது இதுங்கிற போர்வையிலே மாத்த பாத்தாராம்...ஆனு அவர் வியாதியிலே படுத்த உடனே, மத்தவா எல்லாரும் தன்னுடை தொடர்பு கொள்ளத்தான் படைக்கப்பட்டிருக்கிற மாதிரி நினைக்க ஆரம்பிச்சாராம்.

ஜேம்ஸ்: யு மீன்?...

நிர்மலா: ஒவ்வொத்தருக்கும் தனிப்பட்ட வாழ்க்கை, சிந்தனை உண்டுங்கிறதை அவர் ஒத்துக்க தயாரா இல்லே...வியாதி ஜாஸ்தியாய் போனவுடனே, உடம்பு மேலே இருக்கிற ஆசையும் ஜாஸ்தியா போச்சு...தனக்காத்தான மத்தவாங்கிற அகங்காரந்தான் வியாதி...அவ்வளவு ஸூப்பர் ஈகோ...

ச. சே; (நிர்மலாவிடம்) இதுக்கும் காரணம் ஃப்ராயிட் சொல்லியிருக்கிருர். இட் மே அப்ளை டு யு...

நிர்மலா: இட் மே அப்ளை டு மீ?...

ச. சே. எஸ்...உட்ரோ வில்ஸன் லவ்ட் அண்ட் ஹேட்டட் ஹிஸ் ஃபாதர் அட் தி ஸேம் டைம்...

ஜேம்ஸ்: (நிர்மலாவைப் பார்க்காமலே) ப்ரொஃபஸர்...நீங்க என்னைத் தவரு புரிஞ்சுகிட்டீங்க. நான் எதுக்கு அந்தக் கேள்வியைக் கேட்டேன்னு, உங்களுக்கு மக பேரிலே இருக்கிற பாசம் எவ்வளவு நியாயமானதுன்னு புரிஞ்சுக்க...உங்களுக்கும் உங்க மகனுக்கும் நடந்த சண்டையைப் பத்தியோ, மனஸ்தாபத்தைப் பத்தியோ எனக்கு ஒண்ணும் தெரியாது...நிர்மலாவுக்கோ வேறவிதமான பிரச்னை...அதையும் நீங்க புரிஞ்சுக்கணும்.

ச. சே; 'வேறே பிரச்னை'ன்னு?...

ஜேம்ஸ்: ஒவ்வொத்தருக்கும் ஒரு தனிப்பட்ட வாழ்க்கை உண்டுங்கிறதை நீங்க ஒப்புத்துக்கறீங்களா இல்லையா?...பழமொழி கூட உண்டே, தாயும் சேயும் ஒண்ணுன்னுலும், வாயும் வயறும் இரண்டும்பாங்களே, அந்த மாதிரி... வயறு மட்டுமல்ல, மனசும் இரண்டு. உலகத்திலே வயத்துத் தேவைமட்டுமா இருக்குது?...எவ்வளவோ தேவை இருக்குது...இன்னொரு முக்கியமான விஷயம் 'பர்ஸனல் ஃப்ரிடம்'...

(நிர்மலா கையைத் தட்டுகிருள். ஜேம்ஸ் அவளை உற்றுப் பார்க்கிருர்)

நிர்மலா: இவ்வளவு திறமையை எங்கே ஒளிச்சு வைச்சிண்டிருந்திங்க, டாக்டர்? சரஸ்வதி நாக்கிலே பூந்து விளையாடிட்டாளே!...இதைப்பத்தியெல்லாம் உங்களாலே நினைக்க முடியும்ங்கிறது ஆச்சர்யமா இருக்கு...

ஜேம்ஸ்: நீங்க இப்படிச் சின்ன சின்ன விஷயத்துக்கெல்லாம் ஆச்சர்யப்படறது எனக்கு ஆச்சர்யமா இருக்கு...உங்க மாதிரிப் படிச்சவங்க, மேதைங்க...

(சந்திரசேகர் புன்னகை செய்கிருர்)

நிர்மலா; (சிறிது எரிச்சலுடன்) டோன்ட் பி சர்காஸ்டிக் ..

ச. சே; இஸ் இட் யுவர் எக்ஸ்க்ளூஸிவ் ப்ரிவிலேஜ்?...

(நிர்மலா கோபத்துடன் ஜன்னலருகே போய் நிற்கிருள்)

ச. சே: (சிறிது நேரத்துக்குப் பிறகு) 'ஒவ்வொத்தருக்கும் தனிப்பட்ட வாழ்க்கை' அது, இதுங்கிறேளே...நான்தான் அவளைக் கல்யாணம் பண்ணிக்க வேண்டாம்னு, என்னுடையே இருக்கும்படியா கட்டிப் போட்டேங்கறேளா?

(நிர்மலா திரும்பிவருகிருள். அவள் முகம் கோபத்துடன் சிவந்திருக்கிறது)

நிர்மலா: ஆமாம்... நீங்கதான் கட்டிப்போட்டேள்... ஆனு இதை நாசூக்கா செஞ்சேள்... உங்களை விட்டுப் போனு அது தப்புன்னு நினைக்கிற அளவுக்கு ஒரு அசட்டுத்தன மான குற்ற உணர்ச்சியினுலே நான் கஷ்டப்படும்படியா என்னை பலஹீனமாக்கியது நீங்கதான்...உங்க பொண்டாட்டி போனப்புறம் நீங்க இன்னொரு கல்யாணம் பண் ணிண்டிருக்கக் கூடாது?...அப்படிப் பண்ணிண்டிருந்தேள்னு அதுதான் நியாயமா இருந்திருக்கும்!...அப்படியில்லாமே, 'நான் எப்பேர்ப்பட்ட தியாகி பார்த்தாயா'ன்னு காட்டிக் காட்டி என்னை நார்மலா இருக்க விடாமெ குட்டிச்சுவராக்கிட்டேள்...

ஜேம்ஸ்: (இடைமறித்து) ..நிர்மலா.

ச. சே: டாக்டர்...ப்ளீஸ்...அவ பேசட்டும்.

நிர்மலா: பேசத்தான் போறேன்...ரகு கெட்டிக்காரன்...உங்களோட சண்டை போட்டுண்டு சாமர்த்தியமா தப்பிச்சுண்டு போயிட்டான்... உங்களுக்குத் தனிமையைக் கண்டா பயம் ..என்னை வீட்டோட கட்டிப் போட்டது, நிஜமா கேக்கறேன், உங்க பாசமா, சுயநலமா?

(சந்திரசேகர் பதில் கூறவில்லை. கண்களை மூடிக்கொள்கிருர். ஜேம்ஸ் அவளருகில் சென்று அவள் தோள்களைத் தொடுகிருர்)

ஜேம்ஸ்: நான் அவரோட டாக்டர்ங்கிற முறையிலே சொல்றேன்—நீங்க அவரோட இப்படி பேசறது நல்லா இல்லே—இன்னொரு விஷயம், அவரு உங்களைக் கட்டிப்போட்டார்ங் கிறதைக் காட்டிலும் உங்களாலே அவரை விட்டுப் போக முடியல்லேங்கிறதுதான் முக்கியமான சமாச்சாரம்—இதுக்குக் காரணம் தெரியுமோ?...உங்களுக்கும் அவர் பேரிலே பாசம்—இந்தப் பாசம்தான் ஆத்திரமா மாறுது...
(நிர்மலா மோடாவில் உட்காருகிருள்)

நிர்மலா: டாக்டர், ஷல் ஐ டெல் யு ஒன் திங்?
(ஜேம்ஸ் கைப்பையை எடுத்தவர் கீழே வைத்துவிட்டு மோடாவில் உட்காருகிருர்)

ஜேம்ஸ்: எஸ்?...

நிர்மலா: நான் சொல்லப்போறது நடந்து நாலு வருஷமாறது ..
(அவள் சந்திரசேகர் பக்கம் பார்க்கிருள். அவர் கண்களைத் திறக்கவில்லை)

ஜேம்ஸ்: ஏதாவது முக்கியமான விஷயமா? (அவர் எழுந்திருக்க முயல்கிருர்)

நிர்மலா: ப்ளீஸ் ஸிட் டவுன்...நான் சொல்லப் போறது முக்கியமான விஷயந்தான்.

ஜேம்ஸ்: (உட்கார்ந்து கொண்டே) ஆல் ரைட், சொல்லுங்க...

நிர்மலா: அப்பொ நாங்க மெட்ராஸ்லே இருந்தோம்...அவர் ஒரு ஏர்ஃபோர்ஸ் ஆபிஸர். எங்கேயோ ஒரு காமன் ஃப்ரென்ட் வீட்டிலே பார்த்தேன்...ஹி லைக்ட் மி அண்ட் ஐ லைக்ட் ஹிம்...அவரை வீட்டுக்கு அழைச்சிண்டு வந்து அப்பாவுக்கு அறிமுகப் படுத்தி வைச்சேன்... பட்... (அவள் மேலே கூருமல் நிறுத்துகிருள்)

(சந்திரசேகர் கண்களைத் திறக்கிருர். நிர்மலா, அவரை வெறுப்பு வெளிப்படை யாகத் தோன்றப் பார்க்கிருள்)

ச. சே: நீங்க ரெண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு நான் தடையா இருந்தேன்னு சொல்லப் போறியா?...

நிர்மலா: (கோபத்துடன்) வாட் எல்ஸ்?

ச. சே: யு ஆர் ராங், மை டியர் கேர்ல், யு ஆர் ராங்—கல்யாணம் ஆனப்புறங்கூட என்கூட நீங்க இருக்கலாம்னேன்...நான் உன்கூட இருக்கணும்னு கேக்கறதா நினைச்சிண்டு நீ சண்டைக்கு வந்தே... நீ எவ்வளவு தூரம் என்னை வெறுக்கறேன்னு அப்பொத்

தான் எனக்குப் புரிஞ்சுது—அதுக்கப்புறம், உன் பாய் ஃப்ரெண்ட் ஏர் கிராஷ்லே போனன்னு, நான் என்னம்மா செய்ய முடியும்?

நிர்மலா: நீங்க என்ன செய்ய முடியுமா?...நீங்க வேண்டிண்டிங்க, அப்படியே நடந்து போச்சு ...நீங்க ஆரம்பத்திலேயே கேக்கலே? 'ஏர்போர்ஸ், ஆபீஸர்ங்கிறியே, லைஃப் ரிஸ்க் இல்லியான்னு'...நீங்க கேட்டபடியே நடந்து போச்சு...யு விஷ்ட் தட் வே அண்ட் இட் ஹாப்பன்ட்...

ச. சே; வில் யு ஸ்டாப் டாக்கிங் நான்ஸென்ஸ்?...

நிர்மலா: நோ...நான் கல்யாணம் பண்ணிண்டு போயிட்டா யார் உங்களுக்கு இந்த மருந்தெல்லாம் (அவள் மருந்துகளைச் சுட்டிக் காட்டுகிறாள்), கொடுப்பா? மூளையைக் குழப்பற உங்களோட 'பிலாஸஃபிகல் ஜார்னல்ஸெ'ல்லாம் படிச்சு, 'டைப்' செய்து அனுப்புவா? பொண்ணு, நர்ஸ், செகரட்டரி மூணும் சேர்ந்து ஒரு ஆளா கிடைக்கிறது சுலபமா?

ஜேம்ஸ்: (சற்று உறக்க)...நிர்மலா, ப்ளீஸ்...

(சந்திரசேகருடைய கண்கள் தாமாக மூடுகின்றன. அவருக்கு மூச்சு வாங்குகிறது நிர்மலா பேசுவதை நிறுத்திவிட்டு மறுபடியும் ஜன்னலருகே போய் நிற்கிறாள்)

ஜேம்ஸ்: (சந்திரசேகரைத் தொட்டு) யு நோ...ஷி டிட் நாட் மீன் எனிதிங்...ஷி ஈஸ் லிட்டில் எக்ஸைட்டட்...

(சந்திர சேகர் கண்களைத் திறக்கவில்லை. ஜேம்ஸ் சிறிது நேரம் நிற்கிறார். பிறகு நிர்மலா நிற்கும் இடத்தை நோக்கிச் செல்கிறார். அவள் அவரைத் திரும்பி நோக்குகிறாள்)

ஜேம்ஸ்: நான் போயிட்டு வரேன்.

நிர்மலா: (கம்மிய குரலில்) ஐ ஆம் ஸாரி...டாக்டர்...

ஜேம்ஸ்: ஐ வான்ட் டு ஆஸ்க் யு ஒன் திங்...

நிர்மலா: என்ன, டாக்டர்?

ஜேம்ஸ்: உங்களுக்கு ஒரே களைப்பா இருக்கு போலிருக்கு...அவரைக் கவனிச்சுக்க நர்ஸ் வேணுமா?

நிர்மலா: வாட் டு யு மீன்? என்னை அவமானப்படுத்தறதா, எண்ணமா?...அவருக்கு நர்ஸ் அனுப்பிச்சா பிரச்னை தீர்ந்து போயிடுமா?...தயவு செய்து நீங்க போயிட்டு வாங்க, லீவ் மி அலோன்.

ஜேம்ஸ்: நீங்க படிச்சவங்க, யோசிச்சுப் பாருங்க...உங்கப்பாவுக்கு நீங்க கல்யாணம் செய்கிறதிலே இஷ்டமில்லேன்னு வைச்சுக்கிட்டாலும், நீங்க உண்மையிலே விரும்பியிருந்தா உங்க இஷ்டப்படி செய்திருக்க முடியாது?... அவரை விட்டு ஏன் உங்களாலே போக முடியலே? காரணம் தெரியுமா?

நிர்மலா: நீங்க சொன்னதையே திரும்பிச் சொல்லறதுதான் எனக்குக் களைப்பா இருக்கு டாக்டர்...வேறே எதனாலேயுமில்லே...

ஜேம்ஸ்: நோ...நோ...நான் சொல்லறதைப் பூராக் கேளுங்க...அவரு சம்ஸாரத்தை இழந்தவரு...நீங்க அம்மாவை இழந்தவங்க...இரண்டு பேரையும் இந்தப் பொது நஷ்டந்தான் இப்படிப் பிணைச்சு வைச்சிருக்குது...இந்த பந்தத்தை உதறித் தள்ளறதுங்கிறது ஒரு சுலபமான காரியமில்லேம்மா...உங்களாலும் அவரை விட்டுப் போக முடியலே...இதுதான் உங்க எரிச்சலுக்கும், ஆத்திரத்துக்கும் காரணம். யு நீட் ரெஸ்ட்...அதனால்தான் சொல்றேன்...நர்ஸ் வேணும்னு...

நிர்மலா: யாருக்கு, எனக்கா, அவருக்கா?

ஜேம்ஸ்: (சிறிது கோபத்துடன்) டோன்ட் பி ஃப்ரிவலஸ்...

(நிர்மலா சிரிக்கிருள். அவள் சிரிப்பு அவருக்கு எரிச்சலேத் தருகிறது)

ஜேம்ஸ்: எதுக்குச் சிரிக்கிறீங்க?

நிர்மலா: டாக்டர்...(மேலே பேசாமல் மறுபடியும் சிரிக்கிருள்)

ஜேம்ஸ்: வாட் ஹாஸ் ஹாப்பென்ட் டு யு...?

நிர்மலா: நதிங்...எனக்குத் தேவை ரெஸ்ட் இல்லே, டாக்டர்...எனக்கு எரிச்சல், அவரை விட்டுப் போக முடியலேங்கிறதிலே மட்டுமில்லே, உங்க மனோதத்துவ ஆராய்ச்சியைத் தூக்கிக் குப்பையிலே போடுங்க. ஐ நீட் எ மான், (man) ஒரு வேளை, அது நீங்களாகவே இருக்கலாம்...

ஜேம்ஸ்: (அதிர்ச்சியுடன்) வாட்?......

நிர்மலா: உங்க மனைவி உங்களை விவாகரத்து செய்துட்டாங்கிறதிலே ஆச்சர்யமே இல்லே... ஒரு லட்சிய மனுஷனு இருக்கணுங்கிற ஆசைக்கு அதுதான் விலே...ஏன் நீங்க ஒரு சாதாரண மனுஷனு, தலையைச் சுத்தி ‘ஹாலோ’வை(halo) மாட்டிக்காமெ, இருக்கக் கூடாது டாக்டர்?...

ஜேம்ஸ்; என் தலையைச் சுற்றி ‘ஹாலோ’ (halo) இருக்கிறதா நான் நினைச்சுக்கவே இல்லே ...நான் ஒரு சாதாரண மனுஷன்தான்...ஒரு வேளை உங்க கோபமெல்லாம் நான் சாதாரண மனுஷங்கிறத்தினுல்தானே என்னவோ...

நிர்மலா: கல்யாணமான மூணும் வருஷமே மனைவியை விட்டுப் பிரிஞ்சு, பதினைந்து வருஷமா இந்தக் கிராமத்திலே உட்கார்ந்துண்டு, ராப்பகலா, ஏழைகளுக்கு இலவச வைத்தியம், சண்டை போட்டா பஞ்சாயத்துன்னு செய்திண்டிருக்கீங்களே, இந்தச் சிலுவையைச் சுமந்திண்டு அலையறது உங்களுக்கு அலுப்பா இல்லே?...

ஜேம்ஸ்: (புன்னகையுடன்) எனக்கு இதுதான் பிடிச்சிருக்குதுன்னு சொன்னு உங்களுக்குக் கோபம் வருமா?

நிர்மலா; அப்பொ உங்ககிட்ட ஏதோ குறை இருக்குன்னுதான் அர்த்தம்...எல்லாத் துறவிகளுக்கும் ஒரு சரித்திரமுண்டு...

ஜேம்ஸ்: நீங்க எப்படி வேணுமானுலும் முடிவு செய்துக்கலாம்...அதை நான் தடுக்கப் போறதில்லே...

நிர்மலா: உங்களுக்கும் உங்க மனைவிக்கும் எதனுலே பிடிக்காமெ போச்சு, டாக்டர்...

ஜேம்ஸ்: அதை இப்போ சொல்ல வேண்டிய அவசியமென்ன?...இரண்டு பேருக்கும் பிடிக்காமெ போச்சு...அவங்க தனியா இருக்காங்க, நானும் தனியா இருக்கேன்... இரண்டு பேரும் சந்தோஷமா இருக்கோம்.....

நிர்மலா: நீங்க நிஜமாத்தான் சந்தோஷமா இருக்கேளா, இல்லாட்டா, அதைப்பத்தி நினைச்சுப் பாக்கக்கூடாதுங்கிறதுக்காக, இந்த ஊர் விவகாரத்தையெல்லாம் இழுத்துப் போட்டுண்டிருக்கேளா?...ஐ மீன் சப்ளிமேஷன்?....

ஜேம்ஸ்: நான் நெஜமாத்தான் சந்தோஷமா இருக்கேன்...இது சந்தோஷமா இல்லாட்டி சப்ளிமேஷனுன்னு உங்களைப் போல இருக்கிற அமெச்சூர் சைக்காட்டிரிஸ்கிட்டே தெரிஞ்சுகிட்டு அவஸ்தைப் படவும் விரும்பலே... (புன்னகை செய்கிருர்)

நிர்மலா: நான் கொஞ்ச நேரம் முன்னுலே சொன்னதைப்பத்தி நீங்க இன்னும் அபிப்பிராயமே சொல்லலே, டாக்டர்..,

ஜேம்ஸ்: (தயக்கத்துடன்)...எதைப்பத்தி?...

நிர்மலா: ஐ நீட் எ மான் ..ஒரு வேளை... அது நீங்களாகவே இருக்கலாம்.

ஜேம்ஸ்: (சிறிது எரிச்சலுடன்) இதுக்கு நான் என்ன பதில் சொல்லணும்னு எதிர்பார்க்க றீங்க?...'ஆமாம், அது நான்தான்'னு சொல்லிட்டு விளக்கை அணைக்கணுமா?... இல்லாட்டி, 'அது நான் இல்லே'ன்னு சொல்லி வேறெ ஆளை அனுப்பி வைக் கணுமா?...என் பேர்லே உங்களுக்கு 'இன்ட்ரெஸ்ட்' நிஜமாகவே இருந்தா, இப்படியாப் பேசுவீங்க?...யு ஆர் டூ ப்ரௌட்...நிர்மலா, டு ப்ரௌட்....

(அப்பொழுது இடி இடிக்கிறது. ஜன்னல் வழியே வெளியே தெரியும் வானத்தில் மின்னல்... நிர்மலா வெளியே நோக்குகிறாள்)

ஜேம்ஸ்: ஜன்னக் கதவைச் சாத்துங்க...ஒரே காத்தா இருக்குது ..அவருக்கு ஒத்துக்காது...

நிர்மலா: நோ ஐ லைக் திஸ்...

(பலத்த இடி...காற்றின் பலத்த ஆரவாரம். ஜேம்ஸ் சந்திரசேகர் பக்கம் திரும்பிப் பார்க்கிறார். அவர் கண்கள் மூடியிருக்கின்றன)

ஜேம்ஸ்: அவருக்கு இவ்வளவு காத்து ஒத்துக்காது...ஐ ஆம் ஹிஸ் டாக்டர்..

நிர்மலா: ஏன் 'டாக்டர், டாக்டர்'னு உங்களையே இப்படி அடிக்கடி ஞாபகப்படுத்திறீங்க!... என்னைக் கண்டா பயமா இருக்கா?

ஜேம்ஸ்: உங்களைக் கண்டா என்ன பயம்?

நிர்மலா: டாமிட், டு யு லைக் மி ஆர் நாட், ஜேம்ஸ்?...

(ஜேம்ஸ் சிறிது திடுக்கிட்டு நிற்கிறார். இடி, மின்னல்...இருவரும் வெளியே பார்க்கிறார்கள்)

ஜேம்ஸ்: அவரைப் பாருங்க, ஒரு குழந்தை மாதிரி தூங்கிட்டிருக்காரு...

நிர்மலா: (கோபத்துடன்) எனக்கு ஒரு குழந்தைப் பருவமே இல்லாமெ செய்தவர் அவர் தான்...ஐ ஹேட் ஹிம்...ஐ ஹேட் ஹிம்...

ஜேம்ஸ்: வாழ்க்கையிலே ஆடிப்போய் கிடக்கறாரு...நம்ம ரெண்டு பேருடைய முதல் கடமை அவர்தான்...இது ஏன் உங்களுக்குப் புரியமாட்டேங்குது நிர்மலா!...

நிர்மலா: டாம் ஹிம்...டு யு லைக் மி ஆர் நாட்?

ஜேம்ஸ்: அவரைக் கலந்து ஆலோசிக்காமெ என்னாலே ஒரு பதிலும் சொல்ல முடியாது...

நிர்மலா: ஆர் ஆல் தி செயின்ட்ஸ் இம்பொடன்ட், டாக்டர்?...

(அப்பொழுது விளக்கு அணைகிறது...காற்று, இடி, மின்னல்)

ஜேம்ஸ்: மை காட்...விளக்குப் போயிடுச்சே... நிர்மலா!...எங்கே போறீங்க!...மெழுகுவர்த்தி இருக்குதா?...

(ஜேம்ஸ் ஜன்னல் கதவைச் சாத்துகிறார்...ஒரே இருட்டு)

ஜேம்ஸ்: நிர்மலா நிர்மலா, எங்கே போயிட்டீங்க?

(பதிலில்லை...ஜேம்ஸ் தட்டுத் தடுமாறிக் கொண்டு சந்திரசேகரிடம் வருகிறார்)

ஜேம்ஸ்: ப்ரொஃபஸர், ஆர் யு ஆல்ரைட்!...

(ஜேம்ஸ் மரக்காபினெட்டின் மீது மோதி மருந்துப் புட்டிகள் கீழே விழும் சப்தம்)

ஜேம்ஸ்: மை காட்...மருந்துப் பாட்டிலெல்லாம் விழுந்திடுச்சி போலிருக்குதே...

(இடி இடிப்பதும், மின்னலும் படிப்படியாய்க் குறைந்து கொண்டு வருகின்றன)

ஜேம்ஸ்: நிர்மலா... நிர்மலா...

(விளக்கு வருகிறது. சந்திரசேகர் முகம் ஒரு மாதிரியாக இருக்கிறது. ஜேம்ஸ் அவர் கையை அவசர அவசரமாகப் பிடித்து நாடி பார்க்கிருர். உள்பக்கக் கதவைத் திறந்துகொண்டு நிர்மலா இரு கைகளிலும் ஏற்றிய மெழுகு வர்த்தி யுடன் வருகிருள்.

ஜேம்ஸ் நிர்மலாவைப் பார்த்துக் கொண்டே கையை விடுகிருர். அது தொப்பென்று தாளுகவே விழுகிறது)

ஜேம்ஸ்: ஐ ஆம் ஸோ ஸாரி, நிர்மலா...

(நிர்மலா ஒரு கணம் அப்படியே நிற்கிருள். கையிலிருந்த இரு மெழுகுவர்த்தி களேயும் சந்திரசேகர் தலைமாட்டில் அப்படியே பிடித்துக் கொண்டு நிற்கிருள். பிறகு இரண்டு மோடாக்களேயும் இரண்டு பக்கத்திலும் போட்டு மெழுகு வர்த்திகளே வைக்கிருள்)

## காட்சி 2

(ப்ரொஃபஸர் சந்திரசேகர் வீடு, திரை விலகும்போது, காலைநேர வெளிச் சத்தம், முதல் காட்சியைப் போலவே, அரங்க அமைப்பு. சாய்வு நாற்காலி காலியாக இருக் கிறது. மருத்துப் புட்டிகள் வைத்திருந்த மரக்காபினெட்டுக்குப் பதிலாகச் சிறிய மேஜை, அதில் ஒரு சின்ன பூந்தொட்டி, (ஃப்ளவர் வாஸ்) இருக்கிறது. ஜன்னல் கதவுகள் திறந்திருக்கின்றன. மழை பெய்யும் சப்தம்...

சோபாவில் உட்கார்ந்தவாறு, நிர்மலா ஒரு புஸ்தகம் படித்துக் கொண்டிருக்கிருள். அவள் பக்கத்தில் சோபா நாற்காலியில் ரகு. அவள் அண்ணன். பாதி உட்கார்ந் தும் பாதிப் படுத்த நிலையிலும் 'வீக்லி'யைப் புரட்டிக் கொண்டிருக்கிருன். எதிரே டீபாயில் கால்களேப் போட்டுக் கொண்டிருக்கிருன். கையில் சிகரெட். நாற்பது வயதிருக்கலாம். ஆளுல் மிகவும் இளமையான தோற்றம். பாட்டிக் டிஸைன் களுடன் கூடிய புஷ் ஷர்ட்... லுங்கி...

திரை விலகியவுடன் ஓரிரண்டு நிமிஷங்கள் அவன் பத்திரிகையைப் புரட்டி விட்டு அதை விட்டெறிகிருன். டீபாயிலிருந்து கால்களே எடுத்து விட்டுச் சரியாக உட் காருகிருன்)

ரகு: ஸோ...நீ இந்த ராட்டன்... கிராமத்திலேதான் இருக்கப்போறே, பெங்களூருக்கு வரமாட்டே?...

நிர்மலா: (புத்தகத்திலிருந்து கண்களே எடுக்காமலேயே) நோ...

(ரகு எழுந்திருக்கிருன் ...ஜன்னலருகே சென்று வெளியே பார்க்கிருன்)

ரகு: வாட் எ ரெட்சட் வில்லேஜ்...நான் வந்து இருபது நாளாறது...ஓயாமெ இப்படி மழை பேஞ்சுண்டேயிருக்கே...கிழவர் வேறே நல்ல கிராமமா பாத்துப் போயிருக்கக் கூடாது...?

(நிர்மலா பேசவில்லை. ரகு அம்மா படத்தருகே போய் நிற்கிருன். சிறிது நேரம் உற்றுப் பார்க்கிருன்)

ரகு: கிழவர் போட்டோ ஏதாவது இருக்குமா? பக்கத்தில் மாட்டிக் வைக்கலாம்.

(நிர்மலா பதில் சொல்லவில்லை)

ரகு: கிழவரோட போட்டோ இல்லே?

நிர்மலா: இல்லே...

ரகு: சின்ன வயசிலேயே சாகறது நல்லதுதான், அம்மாவைக் கிழவியாகவே என்னாலே நினைச்சுப் பார்க்க முடியலே. கிழவர் படம், சின்ன வயசுப் படம்.. ஏதாவது இருந்தா மாட்டலாம்,..ஆர் எல்ஸ். இட் வில் லுக் ஆட் (odd) பட் புவர் ஓல்ட் மான்... ஹி வாஸ் நெவர் யங்...

(அவன் புத்தக அலமாரியிடத்தருகே சென்று, இரண்டு மூன்று புத்தகங்களை எடுத்து ஒவ்வொன்ருகப் புரட்டிப் பார்த்து விட்டு அலமாரியின் மீது அலட்சியமாக விட்டெறிகிருன். ஒரு புத்தகம் கீழே விழுகிறது...தடித்த பெரிய புத்தகம். அந்த சப்தம் கேட்டு நிர்மலா திரும்பிப் பார்க்கிருள்)

ரகு: (அந்தப் புத்தகத்தை எடுத்துக் கொண்டே)...இந்தப் புத்தகம் பேர் என்ன தெரியுமா?...(புன்னகை)

(நிர்மலா பதில் கூருமல் திரும்பித் தன் புத்தகத்தில் ஆழ்கிருள்)

ரகு: "தியரி அண்ட் எக்ஸ்பிரிமெண்ட்"ரிலேடிங் ஸைக்காலிடிக் டிஸ்பிளேஸ்மெண்ட் டு ஸ்டிமுலஸ் ரெஸ்பான்ஸ் ஜெனரலேஷன்...மை காட் மூச்சு வாங்கறது. (புரட்டுகிருன்)...கிழவர் மார்க் பண்ணி வேறே வைச்சிருக்காரே...ரியலி ஃபன்னி ஓல்ட் மான் (புத்தகத்தை அலமாரியில் வைக்கிருன்)

(ரகு நிர்மலாவிடம் வருகிருன். அவள் பின்னல் நிற்கிருன். அவள் படிப்பதைக் குனிந்து பார்க்கிருன்)

ரகு: (படிக்கிருன்) "தி எத்னிக் அன்ட் ஸோஷியாலிஜிகல் ஆஸ்பெக்ட்ஸ் ஆஃப் மர்டர். சூயிசைட் அன்ட் அதர் க்ரைம்ஸ்... (தோள்களைக் குலுக்குகிருன்) எ கிரேஸி டாட்டர் ஃபார் எ கிரேஸி ஓல்ட் மான்...வெதரே ஒரே டல்லா யிருக்கே. இந்த வெதர்லே இப்படியா 'மர்டர் கிர்டர்' படிச்சிண்டிருக்கணும்.

(நிர்மலா பதில் சொல்லவில்லை, புத்தகத்தை மூடுகிருள். ரகு முன்பக்கமாக வந்து சோபா நாற்காலியில் உட்காருகிருன். பழைய சிகரெட் துண்டிலேயே இன்னெரு சிகரெட் பற்ற வைத்துக் கொள்கிருன். நிர்மலா கண்களை மூடிக் கொள்கிருள்)

ரகு: தூக்கம் வரதா?...ஐ கான் அன்டெர்ஸ்டான்ட்...இந்த மாதிரிப் புத்தகம் படிச்சா?...

நிர்மலா: நேத்து ராத்திரி சரியாத் தூங்கலே...நேத்து ராத்திரியென்ன, இப்பொல்லாம் தூக்கமே வரமாட்டேங்கிறது...(இவ்வாறு சொல்லிக் கொண்டே கண்களைத் திறக்கிருள்)

ரகு: ஐ கான் அன்டெர்ஸ்டான்ட் ..

நிர்மலா: (சற்று உரக்க) வாட் கான் யு அன்டெர்ஸ்டான்ட்?

ரகு: கிழவர் இப்படி திடுதிப்னு...

நிர்மலா: ஸில்லி ..அவர் போனத்தினுலே நான் ஒண்ணும் உருகி உருகிச் சாகலே...

ரகு: (ஆச்சரியத்துடன்) ரியலி?

நிர்மலா: நான் இப்பொ சொல்றேன் கேளு...அவர் போனத்திலே எனக்கும் சந்தோஷந்தான்...அவர் போனத்திலே எனக்குச் சந்தோஷந்தான். (குரல் எழுகிறது)

ரகு: நீ சொல்றதைப் பார்த்தா உனக்குச் சந்தோஷமா தெரியலியே...நீ சொல்றதை நீயே நம்பணும்ங்றப் பிடிவாதம் மாதிரின்னு இருக்கு...

நிர்மலா: (கோபத்துடன்) ஷட் அப்... (கையிலிருந்த புத்தகத்தை வீசியெறிகிருள்...எழுந்து ஜன்னலருகே போய் நிற்கிருள்)

ரகு: உனக்கு என்ன ஆச்சு?...ஆர் யு நாட் வெல்?

(அவன் அவள் விட்டெறிந்த புத்தகத்தை ''டீபாயின்'' மீது வைக்கிறான். நிர்மலா அருகே செல்கிறான்)

ரகு: நான் என்ன சொல்லிவிட்டேன்? உனக்கு ஏன் இவ்வளவு கோபம்?

நிர்மலா: (திரும்புகிறாள்) ஐ ஆம் ஸாரி ரகு...

ரகு: யு ஆர் ரியலி அப்ஸெட்...நிஜமா சொல்லு, நான் பெங்களூருக்குப் போனப்புறம் இந்த வீட்டிலே உன்னாலே தனியா இருக்க முடியுமா? இங்கே இருக்கிற ஒவ்வொண்ணும் அந்தக் கிழவரை உனக்கு ஞாபகப்படுத்தாது?...அந்தப் புத்தகத்திலே சேப்புப் பென்ஸிலாலே மார்க் பண்ணியிருக்கிறதைப் பார்த்த உடனே, எனக்கு என்னமோ கிழவர் அந்தப் புத்தகத்துக்குள்ளே உட்கார்ந்து எட்டிப் பார்த்த மாதிரி இருந்தது ..

நிர்மலா: (சற்று உரக்க) என்னை பயமுறுத்தறயா? நான் உன்னோட பெங்களூருக்கு வல்லேன்னு சொன்னேனே தவிர, இந்தக் கிராமத்திலேயே இருக்கப் போறதா சொல்லலியே?...

ரகு: ஐ ஸீ ...உனக்கும் இந்தக் கிராமம் பிடிக்கலே...

நிர்மலா: இந்தக் கிராமம், இந்த வீடு, ஒண்ணும் பிடிக்கலே...இட் ஈஸ் ஹெல்...

(நிர்மலா இதைச் சொல்லிக் கொண்டே திரும்பி வந்து சோபாவில் உட்காருகிறாள். ரகு சோபா அருகே வந்து நிற்கிறான்)

ரகு: டாமிட்...இப்படியே மழை ஓயாமெ பேஞ்சுண்டிருக்கும்?...அன்னிக்கு பாடியை வைச்சு நெருப்பு மூட்றபோது, எத்தனை வெறகும் விராட்டியும் போட்டாலும் நெருப்பு பத்திக்கவே இல்லே...கிழவர் உள்ளுக்குள்ளே சிரிச்சிண்டிருக்கிற மாதிரி கூட இருந்தது...இந்த உலகத்தை விட்டுப் போகமாட்டேன்னு அவ்வளவு பிடிவாதம் அவருக்கு...ஓ காட்...வாட் ஆன் ஈகோ!!...இன்னொரு விஷயம்....

நிர்மலா: ரகு, ப்ளீஸ்...வில் யு ஸ்டாப் திஸ்?

(அவள் கண்களை மூடிக் கொண்டு சோபாவில் சாய்கிறாள்)

ரகு: (புன்னகையுடன்) என் மாதிரி உன்னாலே இதை 'அப்ஜெக்டிவ்'வா பார்க்க முடியலே போலிருக்கு...ஐ கான் அன்டெர்ஸ்டான்ட்...

நிர்மலா: (கண்களைத் திறந்து உரக்க) டாம் யுவர் அன்டெர்ஸ்டான்டிங்...வில் யு ஷட்அப்.

(ரகு புன்னகை மாறாமல், இன்னொரு சிகரெட் பற்ற வைத்துக் கொள்கிறான்... சிறிது நேரம் மௌனம்)

நிர்மலா: ஐ ஆம் ஸாரி...

ரகு: இந்தக் கிராமத்திலே இருக்கப் போறதில்லேன்னா நீ வேறே எங்கே போகப் போறே?

நிர்மலா: (கண்களை மூடிக்கொண்டு) அதைப்பத்தி இன்னும் யோஜிக்கலே... மெட்ராசுக்குப் போனாலும் போவேன்...

ரகு: மெட்ராசுக்கா?...அங்கே என்ன பண்ணப் போறே?

நிர்மலா: (கண்களைத் திறக்கிறாள்) ஹிந்து தர்மத்தின்படி அப்பா போனப்புறம் அண்ணா தான் அப்பாங்கிற மாதிரி, இப்பொ அப்பா ஸ்தானத்திலே இருந்துண்டு, இந்தக் கேள்வியைக் கேக்கறயா? எனக்கு அப்பா இருந்தது போதும், ஐ டோன்ட் வான்ட் அனெதர்...

ரகு: நான்சென்ஸ்... நான் அப்பாவா ஆகக்கூடாதுங்கிறக்காகத்தான் கல்யாணம் பண்ணிக்கலே, தெரியுமா? நீ தனியாகவே இருந்ததில்லேயேன்னு கேக்கறேன்.

நிர்மலா: தனி!...மை காட்...யார்தான் நம்ம குடும்பத்திலே தனி இல்லே?...நான் அப்பாகூட இருந்தத்தினுலே, இரண்டு பேருடைய தனிமைப் பிரச்னேயும் அதிகமாச்சே தவிர, தீரலே... நீயும் இங்கே இருக்கிறபோது, தனியாத்தானே இருந்தே?

ரகு: எஸ்...யு ஆர் ரைட்...தனியாத்தான் இருந்தேன்...அந்தக் கிழவரும் என்னேப் பத்திக் கவலேப்பட்டதே கிடையாது...

நிர்மலா: "கிழவர் கிழவர்"னு நீ பிடிவாதமா சொல்லறதைப் பார்த்தா, அப்னேயிங் யுவர் சைக்காலஜி...எனக்குத் தோணறது...(நிறுத்துகிருள்)

ரகு: கம் ஆன்...என்ன தோணறது?

நிர்மலா: அப்பா பேரிலே உனக்குப் பாசம் இருக்கு...அதை நீ ஒப்புத்துக்கத் தயாரா இல்லே...

ரகு: (சிகரெட் சாம்பலேத் தட்டிக்கொண்டே) ஓ...வாட் எ டிஸ்கவரி...

நிர்மலா: அப்பாக்கு என் பேரிலேத்தான் பாசம்னு அப்பா பேரிலே கோவிச்சுண்டு அப்பொ போனியே, அதுக்கு என்ன காரணம், யோசிச்சுப் பாத்தியா?

ரகு: (தோள்களேக் குலுக்கிக் கொண்டே) அதுக்கு என்ன காரணம்னு, அதான் காரணம்...

நிர்மலா; நோ...அதுக்குக் காரணம் பொருமை...பொருமை எப்பொ வரும்? நீ ஒத்தர்கிட்டே ரொம்பப் பாசம் வைக்சு, ஆனு அவர் அதே அளவு உன்கிட்ட உதாசினமா இருந்தார்னு...

ரகு: (இடைமறித்து) ஆல்ரைட், ஆல்ரைட்...மே பி யு ஆர் ரைட்...ஆனு நீ சொல்றது ஓரளவுதான் உண்மை...எனக்கு அப்பா பேரிலே இருந்தது, பாசம் இல்லே அநுதாபம்.

நிர்மலா: (ஆச்சர்யத்துடன்) அநுதாபமா?

ரகு: எஸ்...அநுதாபந்தான்...அதுக்குக் காரணம் இருக்கு...

(அவன் இவ்வாறு கூறிக்கொண்டே எழுந்திருக்கிருன்)

நிர்மலா: என்ன காரணம்?

(ரகு பதில் கூருமல் அம்மா படத்தருகே போய் நிற்கிருன். சிறிது நேரம் உற்றுப் பார்க்கிருன்)

நிர்மலா: என்ன காரணம்?

ரகு: அம்மாவை உனக்கு ஞாபகம் இருக்கா?

நிர்மலா: நோ...

ரகு: ஞாபகம் இருக்க முடியாது...அம்மா போனபோது உனக்கு வயசு, இரண்டோ, மூணே...ஆனு எனக்கு நன்னு ஞாபகம் இருக்கு...எனக்கு அப்பொ பன்னெண்டு வயசுன்னு நினேக்கிறேன்...ரொம்ப அழகாகவும் இருந்தா அண்ட் ஆன்இன்ட்ரெஸ்டிங் வுமன் டூ...

(அவன் திரும்பி வந்து சோபா நாற்காலியில் உட்காருகிருன்)

நிர்மலா: அம்மாவை எனக்கு ஞாபகம் இல்லாட்டாலும் அப்பா அவரை எப்படி நடத்திருப்பார்னு என்னுலே புரிஞ்சுக்க முடியும்...புவர் உமன்.

ரகு: நோ...அம்மா அப்பாவை எப்படி நடத்தினுங்கிறதுதான் சுவாரஸ்யமான விஷயம் ...புவர் மான்...

நிர்மலா: (ஆச்சர்யத்துடன்) வாட் டு யு மீன்?

ரகு: நீ கேட்ட கேள்விக்கு இதுதான் பதில்...அப்பா பேரிலே எனக்கு இதனுல்தான் அநுதாபம்.

நிர்மலா: யு மீன்?...

(ரகு பதில்கூற வில்லே. சிறிது நேரம் மௌனம். புகையை நெஞ்சுக்குள் இழுத்து விட்டுக் கொண்டே சிந்திக்கிருன்)

நிர்மலா: கம் ஆன், யு மீன்?...

ரகு: ஒரு கதை சொல்லட்டுமா?

நிர்மலா: கதையா?...

ரகு: (எழுந்து போய் புகைப்படத்தருகே நிற்கிருன்)

எஸ் கதைதான்...சேப்பா, உயரமா, ஒரு அழகான பெண்...அவ துரதிருஷ்டம் அவளுக்குத் தாலி கட்டினவன், பொண்டாட்டிக்கும் புஸ்தகத்துக்கும் வித்தியாசம் தெரியாத முட்டாள்...ஒவ்வொரு நாளும் அவாளுக்குள்ள சண்டைதான்...அவ திடீர்னு சண்டை போடறதை நிறுத்தினு...காரணம், சேப்பா, உயரமா ஒரு அழகான ஆண்...அவளுக்கு ஏதோ உறவுன்னு சொல்லிண்டு அடிக்கடி ஆத்துக்கு வர ஆரம்பிச்சான்...ஒரு நா, இரண்டு பேரும் சிரிச்சுப் பேசிண்டிருக்கா, தாலி கட்டினவன் அங்கே திடீர்னு வரான்...வாய்க்கு வந்தபடி அவளேத் திட்ருன்...அவ சிரிக்கிரு...அவன் திட்டத் திட்ட அவ சிரிக்கிரு. உடனே அவன் அழ ஆரம்பிச்சுடருன்...இந்தக் காட்சிக்கு நான் ஒரு சாட்சி.

நிர்மலா: போறும்...நௌ ஐ நோ...

(ரகு இன்னொரு சிகரெட்டைப் பற்றவைக்கிருன். திரும்ப நிர்மலாவிடம் வருகிருன்)

ரகு: நௌ யு நோ வாட்?

நிர்மலா: அப்பாக்கு உன்னேக் கண்டா ஏன் பிடிக்கலேன்னு, இப்பொ புரியுது...

ரகு: ஏன்?...

நிர்மலா: நீ அவரை, அவரோட "ஈகோ" சூன்யமா இருக்கச்சே நீ பாத்திருக்கே...உன்னேப் பாக்கறப் போதெல்லாம் அவருக்கு அந்த நிகழ்ச்சி ஞாபகம் வந்திருக்கு.. அதனுல் தான் அவருக்கு உன் பேரிலே அவ்வளவு எரிச்சல், கோபம்.

ரகு: (யோசித்துக் கொண்டே) பர்ஹாப்ஸ்...அதான் என்னேட அநுதாபம்...அவருக்கு எவ்வளவு ஆத்திரத்தை மூட்டித்தோ என்னவோ...

நிர்மலா; நான் பொறந்து கொஞ்ச வருஷத்துக்கெல்லாம் அம்மா போயிட்டா...அந்த சந்தோஷந்தான் என் பேரிலே பரிவா மாறியிருக்கலாம்னு தோணறது...ஐ ரெப்ரெஸென்டட் டெலிவரன்ஸ்...

ரகு: இருக்கலாம்.

நிர்மலா: அம்மாவையும் என்னுலே புரிஞ்சுக்க முடியறது ..அப்பாவைப் பழி வாங்கணும்னே அம்மாவும் அப்படி இருந்திருக்கலாம்...ஹி வாஸ் ஆன் இம்பாஸிபில் மான்... அவரோட இருந்த ஒவ்வொரு நிமிஷமும் எனக்கு...

ரகு: நோ...ப்ளீஸ். புவர் மான் ஈஸ் டெட் ..ஆர், ஈஸ் ஹி?

(நிர்மலாவின் முகம் மாறுதலடைகிறது. வெட்டவெளிப் பார்வை. முகம் வியர்க்கிறது)

நிர்மலா: (முணுமுணுப்பாக) எஸ். யு ஆர் ரைட்.. ஈஸ் ஹி டெட்?

(நிர்மலாவின் உடம்பு லேசாக நடுங்குகிறது. அவள் கண்களை மூடிக் கொள்கிருள். திடீரென்று எழுந்திருக்கிருள்)

நிர்மலா: (உரக்க) இது ஒரு பிசாசு பிடிச்ச ஊர்...ஐ வான்ட் டு கெட் அவுட் ஆஃப் திஸ் ஜாய்ன்ட்...

(ரகு சோபாவில் உட்கார வந்தவன் அவளைத் திடுக்கிட்டுப் பார்க்கிருன்)

நிர்மலா: பட்...உன்கூட வரமாட்டேன்...ஐ வான்ட்...ஃப்ரீடம்...நான் இந்த முப்பது வருஷமா யாரா இருந்தேன்னு மறந்துட்டு, புதுசா வாழப் போறேன்...சந்திரசேகர் ஈஸ் டெட் அண்ட் ஸோ ஆல்ஸோ ஹிஸ் டாட்டர்...நிர்மலா ஈஸ் டெட்... (சிரிக்கிருள்)... நிர்மலா ஈஸ் டெட் ..

ரகு: ஏன் நிலை கொள்ளாம இருந்து தவிக்கறே?...காரணம் ஏதாவது இருக்கா?...

(நிர்மலா அம்மா படத்தருகே சென்றவள் திரும்பிப் பார்க்கிருள்)

நிர்மலா: என்ன காரணம்?...

ரகு: (தோள்களைக் குலுக்கியவாறு) ஐ டோன்ட் நோ...

(நிர்மலா பெரிதாகச் சிரிக்கிருள். அது இயற்கையாக இல்லை)

நிர்மலா: நான் என்னுடை சுதந்திரத்தை அனுபவிச்சிண்டிருக்கேன்...ரகு...அனுபவிச்சிண்டிருக்கேன் எஸ்...எஸ்...ஐ ஆம் என்ஜாயிங் மை ஃப்ரீடம்...இதோ இந்தப் புத்தகத்தை யெல்லாம் எரிக்கப் போறேன்... அப்பாவை ஞாபகப்படுத்தற எதுவுமே எனக்கு வேணும்...சந்திரசேகர் போனப்புறம், அவரோட ஞாபகார்த்தமா இருக்க வேண்டிய அவர் பொண்ணே போனப்புறம்...இந்தப் புத்தகமெல்லாம் எதுக்கு? அதோ...அந்த நாற்காலியை (சாய்வு நாற்காலியைச் சுட்டுகிருள்) அவரோடயே வெச்சு எரிச்சு இருக்கக்கூடாது? சந்திரசேகர் ஈஸ் டெட். அண்ட் ஸோ ஆல்ஸோ ஹிஸ் ஈஸி சேர்...(சிரிக்கிருள்)

(ரகு எழுந்து போய் அவள் தோளைத் தொடுகிருன்)

ரகு: ஐ ஆம் அஃப்ரெய்ட், யு ஆர் நாட் வெல்...போய் படுத்துக்கோ...இந்த இருபது நாளா தூக்கம் வேறே இல்லே...

நிர்மலா: இன்னெரு விஷயம் தெரியுமா உனக்கு?

ரகு: என்ன?

நிர்மலா: நீ வரப்போறேன்னு அப்பா ரொம்ப சந்தோஷமா இருந்தார்...நீ அடிச்சிருந்த தந்தியைத் திரும்பித்திரும்பிப் பார்த்துண்டிருந்தார்...இதுக்குக் காரணம் தெரியுமா?

ரகு: என்ன?

நிர்மலா: எங்க ரெண்டு பேருக்கும் ஒத்தரை ஒத்தரை பார்த்து அலுத்துப் போச்சு... ஆனு அவர் உன்னுடை தந்தியைப் பார்த்துச் சந்தோஷப்படரார்னு உடனே எனக்கு ஆத்திரமா வந்தது... அன்னிக்கு எனக்கும் அவருக்கும் பெரிய சண்டை.

ரகு: என்னிக்கி?...

நிர்மலா: அன்னிக்குதான், அவர் போன அன்னிக்கி...ஹார்ட் அட்டாக்...எஸ் ஹார்ட் அட்டாக் (சிரிக்கிருள்)

ரகு: ஹார்ட் அட்டாக் இவ்வளவு ஹாஸ்யமான விஷயம்னு எனக்குத் தெரியாது நிர்மலா...

(அவன் சிகரெட் சாம்பலை டீபாயின் மேலிருக்கும் ஆஷ்டிரேயில் தட்ட வருகிருன்)

நிர்மலா: பர்ஹாப்ஸ்...பர்ஹாப்ஸ்...டாக்டர் ஜேம்ஸ் சொன்னது வாஸ்தவந்தான் போலிருக்கு... (லேசாக முணுமுணுக்கிருள்)

ரகு: டாக்டர் ஜேம்ஸ் என்ன சொன்னுர்?

(நிர்மலா புத்தக அலமாரியருகே கைகளைக் கட்டிக் கொண்டு நிற்கிருள். சிறிது நேரம் மௌனம்)

ரகு: எஸ்...டாக்டர் ஜேம்ஸ் என்ன சொன்னுர்?

நிர்மலா: என்னுலேயும் அப்பாவை விட்டுப் போக முடியலேன்னுதான் அவர் பேரிலே எனக்கு அவ்வளவு ஆத்திரம், எரிச்சல்னுர்...இட் மீன்ஸ்...

(ரகு இன்னெரு சிகரெட் பற்ற வைக்கிருன்...சோபாவில் உட்காருகிருன்)

ரகு: இட் மீன்ஸ்?...

நிர்மலா: எனக்கும் அவர் பேரிலே பாசம்னு அர்த்தம்...உன் தந்தியைப் பாத்து அவர் சந்தோஷப்பட்ட உடனே, எனக்கு ஏன் அவர் பேரிலே அவ்வளவு கோபம் வந்தது? பத்து வருஷத்துக்கு முன்னுலே உனக்கு அப்பா பேரிலே ஏன் அவ்வளவு கோபம் வந்தது? நீ அனுதாபம்னு சொன்னே...எனக்கு அவர்பேரிலேஅனுதாபமே கிடையாது...பாசந்தான்...பாசமும், வெறுப்பும் அடிப்படையிலே ஒரே உணர்வுதானு?

ரகு: இருக்கலாம்...

நிர்மலா: ஒரு காசோட ரெண்டு முகம் மாதிரி...தனித்தனியே பாசத்துக்கோ வெறுப்புக்கோ அர்த்தம் கிடையாது...

ரகு: (ஏளனத்தின் சாயை தோன்ற) ஒண்ணு நிஜம்னு, இன்னெண்ணு நிழல்...ஹிட்லர் ஏன் உலகத்தையே அழிக்கப் பார்த்தான்? உலகத்து பேரிலே அவ்வளவு ஆசை... சரிதானே?...

நிர்மலா: நாம விரும்பற பொருளே நாம் அழிக்கிருேம்...இதுதான் லாஜிக்...

ரகு: ரியலி, இட் ஈஸ் வெரி லாஜிக்கல்.

நிர்மலா: நாம விரும்பற பொருளே முழுசா ஆளப் பாக்கிருேம்...முடியாட்டா அந்த இயலாமையே அழிக்கணும்னு பாக்கறது...ஸோ...ஸோ...

(அவள் சோபாவை நோக்கி வருகிருள்.. சற்றுத் தடுமாறுகிருள். நெற்றியில் விழுந்த கூந்தல் மயிரைக் கோதியவாறு சோபாவில் உட்காருகிருள்)

ரகு: ஸோ.. வாட்?...

நிர்மலா: கில் தி திங் யு லவ் ..

(இதைச் சொல்லிவிட்டு எழுந்து ஜன்னலருகே போய் நிற்கிருள். சிறிது நேரம் வெளியே பார்த்துக் கொண்டிருக்கிருள். மழை நிற்கவில்லே. ரகுவும் எழுந்து வருகிருன். அவளருகே சிறிது நேரம் நிற்கிருன். அவளே உற்றுப் பார்க்கிருன்)

நிர்மலா: (அவனேப் பார்க்காமலேயே) ஏன் இப்படி என்னேப் பார்க்கறே?

ரகு: (தோள்களேக் குலுக்கிக் கொண்டே) நதிங்..

நிர்மலா: ஏன் இப்படி மழை ஓயாமெ பேஞ்சுண்டேயிருக்கு?...

ரகு: ஒரு வேளே...(மேலே சொல்லாமல் நிறுத்துகிருன்)

நிர்மலா: சொல்லு...கம் ஆன்...

ரகு: அப்பாவும் இப்படித்தான் நசநசன்னு ஓயாமெ பேசிண்டிருப்பார்... அப்பாதான் இன்னும் போறத்துக்கு இஷ்டமில்லாமெ நசநசன்னு, இப்படி மழையா மாறி...

(நிர்மலா ஜன்னல் கதவைச் சாத்துகிருள். ரகுவைப் பார்காமலேயே சோபாவில் உட்காருகிருள். ரகு பூந்தொட்டி வைத்திருக்கும் மேஜையருகே போய், ஒரு கையை வயிற்றைத் தழுவியவாறு வைத்துக் கொண்டு, இன்னெரு கையில் சிகரெட் குடிக்கிருன்)

ரகு: இருபது நாள் இப்படி மழை பேஞ்சு நான் பார்த்ததேயில்லே... கேள்விப்பட்டது மில்லே...இட் ஈஸ் ஆல்மோஸ்ட் சூப்பர்நாச்சுரல்...

(நிர்மலா 'டீபாயி'லிருந்து புத்தகத்தை எடுத்து படிக்கத் தொடங்குகிருள்)

ரகு: பைதிவே, டாக்டர் ஜேம்ஸ்கிட்டே நம்ம வீட்டு விஷயங்களைப் பத்தியெல்லாம் நீ பேசறதுண்டா?

நிர்மலா: (புத்தகத்தைப் பார்த்துக் கொண்டே)...எஸ்...

ரகு: உன்னலே அப்பாவை விட்டு ஏன் போக முடியலேன்னு அவர் சொன்னர்னு இப்பொ சொன்னயே, அப்படிப்போறதா உனக்கு "ஐடியா" இருந்ததா?...

நிர்மலா: (புத்தகத்தைப் பார்த்துக் கொண்டே) இருந்தது...நான் ஒத்தரைக் கலயாணம் பண்ணிக்கலாம்னு நினைச்சேன்...அப்பாவுக்கு இஷ்டமில்லே...என்னலேயும் அப்பாவை விட்டுப் போக முடியலே...ஆர் யு ஸாடிஸ்ஃபைட்? (குரல் எழுகிறது)

ரகு: உனக்கு ஏன் இவ்வளவு எரிச்சல்? டாக்டர் ஜேம்ஸ்கிட்டே ஃப்ரியா பேசுவியான் கேட்டேன்...ஐ லைக் ஹிம்...ரொம்ப நல்ல, சாதுவான மனுஷர்னு தோண்றது.

நிர்மலா: ஐ ஸீ...

ரகு: பட்...உன்னேடெ இவ்வளவு ஃப்ரியா பழகினவர் ஏன் இப்பொ அப்பா போனதும் உடனே ரொம்ப ஒதுங்கிப் போயிட்டார்?

நிர்மலா: ஐ டோன்ட் நோ...

ரகு: இந்த ஊர்லே அவருக்கு நல்ல பேர் போலிருக்கு...இங்க வந்தவா எல்லாரும் அவரைப்பத்தி பிரமாதமா பேசரு...அவர்தான் இந்த ஊரோட மனச்சாட்சியோ?

(நிர்மலா பேசாமலிருக்கிருள்)

ரகு: (புன்னகையுடன்) உன்னுடைய மௌனத்தை எப்படி அர்த்தம்பண்ணிக்கிறதுன்னு புரியலே.

நிர்மலா: ஜஸ்ட் ஐ டோன்ட் கேர்...

ரகு: உனக்கு ஏன் இப்படிக்கோபம் திடீர் திடீர்னு வரது?

நிர்மலா: ரொம்ப சாமர்த்தியமா பேசறதா நினைச்சிண்டு சுத்திவளைக்காதே...ஏதாவது கேக்கணும்னு நேரக் கேளு...

(ஒரு சிகரெட் துண்டை ஆஷ்ட்ரேயில் போடுகிருன். எழுந்து சோம்பல் முறித்தவாறு ஓர் அலட்சிய பாவத்துடன் கேட்கிருன்)

ரகு: ஜேம்ஸை உனக்குப் பிடிச்சிருக்கா?

நிர்மலா: பிடிச்சிருக்கா இல்லையான்னு என்னலே பதில் சொல்ல முடியாது...அவர் எனக்குத் தேவையா இருக்கார்...இதான் என்னலே சொல்ல முடியும்...

ரகு: யு மீன் செக்ஸ்? (மறுபடியும் உட்காருகிருன்)

நிர்மலா: செக்ஸ் மட்டுமல்ல...டாக்டர் ஜேம்ஸ் ஒரு சராசரி மனுஷன் ... ஒரு 'அப்நார்மல்' சூழ்நிலையிலே வளர்ந்த எனக்கு இதுதான் ஆறுதலா இருக்கும்னு நினைக்கறேன்...

ரகு: ஆனா ஒரு சராசரி மனுஷர்கிட்டே உனக்கு எப்படி 'இன்ட்ரெஸ்ட்' வந்தது?...

நிர்மலா: ஐ நீட் ஹிம் ...

ரகு: அவருக்கு இது தெரியுமா?

நிர்மலா: தெரியும்...அவர்கிட்டே இதைப்பத்தி நேராகவே பேசினேன்...அவர் இன்னும் பதில் சொல்லலே...இன் ஃபாக்ட் இப்பொ அவருக்கு சம்மதிக்கத் தடை ஒண்ணுமில்லேன்னுதான் நினைக்கிறேன்.

ரகு: முன்னாலே தடை இருந்ததா?

நிர்மலா: எஸ்...

ரகு: (அவளைப் பார்க்காமலே) தடை நீங்கி எத்தனை நாளாறது? இருபது நாளா?

நிர்மலா: (கோபத்துடன்) வாட் டு யு மீன்?...

ரகு: நான் என்ன சொல்றேன்னு உனக்குத் தெரியும்...அப்பாக்கு இதில் சம்மதமா? அவர்தானே தடை?...

நிர்மலா: நீ எந்த வாயோட இதைக் கேக்கறே? பத்து வருஷத்துக்கு முன்னாலே வீட்டை விட்டுப் போனியே, அப்பாக்குச் சம்மதமான்னு கேட்டுண்டுதான் போனியா? இப்பொ வரேன்னு தந்தி அடிச்சியே, நீ வரத்தைப்பத்தி அப்பாக்குச் சம்மதமான்னு கேட்டுண்டுதான் வந்தியா? யு ஹாவ் தி சீக் டு ஆஸ்க் மி...

ரகு: ஐ ஆம் ஸாரி...உனக்கு ஏன் இவ்வளவு கோபம் அடிக்கடி வரதுன்னுதான் எனக்குப் புரியலே...

(நிர்மலா பதில் சொல்லவில்லை. ரகு இன்னொரு சிகரெட்டை பற்ற வைக்கிறான்)

ரகு: ஐ திங்க்...(மேலே சொல்லவில்லை)

நிர்மலா: எஸ், யு திங்க்...?

ரகு: அப்பாக்கும் உனக்கும் இதைப்பத்தி ஒரு ஆக்ரோஷமான விவாதம் நடத்திருக்கலாம்...இல்லாட்டா, அப்பா சம்மதம் இல்லாமே டாக்டர் ஜேம்ஸ் உன் யோஜனையை ஏத்துக்கமாட்டேன்னாரோ என்னவோ? நான் கேட்டதும் அந்தப் பழைய கோபம் இப்படித் தீடீர்னு வெடிச்சிருக்கு...(புன்னகை)

(நிர்மலா பதில் சொல்லவில்லை)

ரகு: டாக்டர் ஜேம்ஸ் இன்னும் ஏன் கல்யாணம் பண்ணிக்கலே? அவருக்கு நாப்பது வயசு இருக்குமா?

நிர்மலா: நீ ஏன் கல்யாணம் பண்ணிக்கலே, உனக்கும் நாப்பது வயசு ஆகலே?...

ரகு: நீதான் இப்பொ சொன்னியே...அவர் ஒரு சராசரி மனுஷன்னு...ஒரு சராசரி மனுஷன் ரொம்ப அந்தரங்கமான காரணம் இருந்தாலொழிய கல்யாணம் பண்ணிக்காமெ இருக்கமாட்டான்...ஆனா உனக்குத் தெரியும் நம்ம குடும்பத்திலே யாருமே சராசரியில்லேன்னு...வி ஆர் ஆல் அப்நார்மல்...

நிர்மலா: நீ கல்யாணம் பண்ணிக்காமே இருக்கிறதுக்கு நீ 'அப்நார்மல்'ங்கிறது மட்டுந்தான் காரணமா?...

ரகு: (புன்னகையுடன்) இல்லே...கல்யாணத்தைப்பத்தி யோசிக்கிற அளவுக்கு வாழ்க்கை எனக்கு இன்னும் அலுத்துப் போகலே...அது கிடக்கட்டும்...நான் கேட்ட கேள்விக்கு நீ இன்னும் பதில் சொல்லலே...

நிர்மலா: என்ன கேள்வி?...

ரகு: டாக்டர் ஜேம்ஸைப்பத்தி...

நிர்மலா: ஓ...அவரைப்பத்தியா..? அவர் கல்யாணமானவர்தான்...அவரும் அவர் பொண்டாட்டியும் ஒத்தரை ஒத்தர் புரிஞ்சிண்டு விலகிண்டுட்டா...

ரகு: குட்...இரண்டு பேரையும் 'அப்ரிஷியேட்' பண்ணனும்...இது அவருக்கு ஒரு சாதகமான விஷயந்தான், சந்தேகமில்லே...

நிர்மலா: சாதகமான விஷயமா, அப்படின்னு?..

ரகு: ஐ மீன் இன் ஹிஸ் ஃபேவர்...தப்பு செஞ்சுட்டோம்னு புரிஞ்சுண்டு அதைத் திருத்திக்கிறத்துக்கும் ஒரு தைர்யம் வேணும்...வாழ்க்கையிலேயே நாம்தான் பாக்கறமே, தம்பதிகள், ஒத்தருக்கொத்தர் தண்டனையா?...

நிர்மலா: டாக்டர் ஜேம்ஸ் ஈஸ் எ கிறிஸ்டியன்...

ரகு: யு மீன்...?

நிர்மலா: அம்மி, அருந்ததி விவகாரமெல்லாம் அவருக்குக் கிடையாது...

ரகு: ஓ...யு மீன் தட்வே...அது கிடக்கட்டும், இந்தக் கிராமம் உனக்குப் பிடிக்கலேன்னியே, டாக்டரும் உன்னோடை இந்தக் கிராமத்தை விட்டுப் புறப்படத் தயாரா இருக்காரா?...

நிர்மலா: ஐ டோன்ட் நோ...எனக்கு என்னமோ அவர் இந்தக் கிராமத்திலே நடத்தற வாழ்க்கை இயற்கையா தெரியலே...எ கைண்ட் ஆஃப் ஸப்ளிமேஷன்... பொண்டாட்டி ஒரு வண்ணாத்திப் பூச்சியா இருந்திருக்கலாம்...இவருக்கோ கூச்சமான சுபாவம்...இந்தப் போராட்டத்திலே ஏற்பட்ட ஏமாற்றந்தான் இவரை காந்தியா மாத்தி யிருக்கும்னு நினைக்கிறேன்.

(ரகு எழுந்து நிர்மலாவுக்குப் பின்னால் போய் நிற்கிறான்)

ரகு: (சிரித்துக் கொண்டே) இட் ஈஸ் ஃபன்னி...

நிர்மலா: வாட் ஈஸ் ஃபன்னி?...

ரகு: நம்ம அம்மா வண்ணாத்திப் பூச்சியா இல்லாவிட்டாலும் கிட்டத்தட்ட ஜேம்ஸ் அடைஞ்ச ஏமாற்றத்துக்கும், நம்ம அப்பா அடைஞ்ச ஏமாற்றத்துக்கும் வித்தியாச மில்லே...ஆனா அப்பாக்கும் ஜேம்சுக்கும் எவ்வளவோ வித்தியாசம்? ஒன் பிகேம் எ சினிக், அன்ட் தி அதர், எ ஸெய்ன்ட்...

நிர்மலா: ஸெய்ன்டா இருக்கிறதும் ஒருவகையான பர்வெர்ஷன்தான்... ஜேம்ஸ் ஒரு சராசரி மனுஷர்ங்கிறத்தினால்தான் அவர் ஸெய்ன்ட் வேஷம் போடறதை, நான் நம்பலே

ரகு: ஒரு ஸினிக்கூட இத்தனை வருஷம் இருந்துட்டு ஒரு ஸெய்ன்ட்கூட இருக்கப் போறதுதான், பர்ஹாப்ஸ்...லாஜிகல் சேன்ஜ்...

(இதைச் சொல்லிக் கொண்டே அவன் ஜன்னலருகே போய் நிற்கிறான். ஜன்னல் கதவுகளைத் திறக்கிறான்)

ரகு: மை காட்... இன்னும் மழை பேஞ்சுண்டேயிருக்கே? நிக்கவே நிக்காதோ?...

நிர்மலா: ஜன்னக் கதவுகளைத் தயவுசெய்து சாத்து...

ரகு: ஏன்... அப்பா ஞாபகம் வரதா?...

(நிர்மலா எழுந்துபோய் ஜன்னல் கதவுகளைச் சாத்துகிருள். சிறிதுநேரம் மௌனம்)

நிர்மலா: இந்தச் சனியன் பிடிச்ச மழை நிக்கவே, நிக்காது...

ரகு: ஏன் அப்படிச் சொல்றே?...

(நிர்மலா பதில் கூறவில்லை. சோபாவில் சாய்ந்துகொண்டு கண்களை மூடிக் கொள்கிருள்)

ரகு: ஐ ஹாவ் எ ஃபீலிங்... (சொல்லாமல் நிறுத்துகிருன்)

(அவன் எழுந்து புத்தக அலமாரியருகே போய் நிற்கிருன். இன்னொரு சிகரெட் பற்ற வைத்துக் கொள்கிருன். சிறிது நேரம் மௌனம்)

நிர்மலா: சொல்லேன், ஏன் நிறுத்திட்டே?...

ரகு: நீ ஏதோ குற்ற உணர்ச்சியிலே அவதிப்படற மாதிரி இருக்கு... 'தி எத்திக் அண் ஸோஷியலாஜிகல் ஆஸ்பெக்ட்ஸ் ஆப் மர்டர்'...

(நிர்மலா சடக்கென்று எழுந்து அவனிடம் வருகிருள்)

நிர்மலா: எஸ்... யு ஆர் ரைட்... நீ நினைக்கிறது சரிதான்...

(அவள் இதைச் சொலலிவிட்டு ஜன்னலருகே போய் நிற்கிருள். சிறிது நேரம் மௌனம)

ரகு: கான் ஐ ஹெல்ப் யு?...

நிர்மலா: அவசியமில்லே ..(அவள் அவனைப் பார்க்காமலேயே சொல்லுகிருள்)

ரகு: யு ஆர் அப்ஸெட்...நான் ஏதாவது உதவி செய்யணும்னு சொல்லேன், ஏன் இப்படிப் பிடிவாதமா இருக்கே?...

நிர்மலா: நான் இந்த ஊரைவிட்டுப் போகணும்...ஜேம்ஸ்கிட்டே இதைப்பத்தி நீ சொல்ல லாம்...இந்த 'ஹெல்ப்' போறும் ..

ரகு: ஆர் யு ஸீரியஸ் அபௌட் ஜேம்ஸ்?...

நிர்மலா: யெஸ்...

ரகு: ஆல்ரைட்....நான் அவர்கிட்டே இதைப்பத்திப் பேசத் தயார்...ஆனு ஒண்ணு... இதைப்பத்தி அவர்கிட்ட பேசறபோது, ஏன் அவர்கிட்டே உனக்கு ஈடுபாடு வந்ததுன்னு அவர் கேட்டார்னு, என் மனசிலே தோணற யூகங்களைச் சொல்லத் தயங்கமாட்டேன்...

நிர்மலா: என்னை பயமுறுத்தறையா?...

ரகு: பயமுறுத்தலே... நீ என்கிட்டே மனசைவிட்டு வெளிப்படையா பேசமாட்டேங்கிறே, நான் வேற என்ன செய்ய முடியும்?...

நிர்மலா: நான் வெளிப்படையா என்ன சொல்லணும்னு எதிர்பார்க்கறேt...

ரகு: ஐ டோன்ட் நோ...

நிர்மலா: நீ ஜேம்ஸ்கிட்டே போய் என்ன வேணுமானாலும் சொல்லலாம்...எனக்கு ஆட்சேபணை இல்லே ..

(ரகு ஜன்னல் கதவுகளைத் திறந்து பார்க்கிறான். மழை பெய்கிறது)

ரகு: இன்னும் மழை நிக்கலே... இது உனக்கு அமானுஷ்யமா படலே...

(நிர்மலா ஜன்னல் கதவுகளைச் சாத்துகிறாள். சோபாவில் உட்காரப் போகிறாள்)

ரகு: இந்த மழை என்னதான் வேணுங்கிறது? ஏன் இப்படிப் பேஞ்சுண்டேயிருக்கு...

(உட்காரப்போன நிர்மலா கோபத்துடன் திரும்பிப் பார்க்கிறாள்)

ரகு: நிர்மலா...டோன்ட் யு திங்க்?...

நிர்மலா: (உரக்க அவனை இடைமறித்து) ஷட் அப்...

(ரகு அவளை உற்றுப் பார்க்கிறான். நிர்மலா சோபாவில் உட்கார்ந்து கொண்டு கைகளால் முகத்தை மூடிக் கொள்கிறாள்)

## காட்சி 3

(ப்ரொஃபஸர் சந்திரசேகர் வீடு... அந்தி வெளிச்சத்தில் வீடு மங்கலாகத் தெரிகிறது. ஓரிரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு, வாசற்கதவு தட்டப்படும் சப்தம்... நிர்மலா உள் பக்கத்திலிருந்து வருகிறாள். சிறிது தயக்கம் கதவு மறுபடியும் தட்டப்படுகிறது. கதவைத் திறக்கிறாள். ரகு உள்ளே நுழைகிறான். மழைக் கோட்டைக் கையில் வைத்திருக்கிறான். லுங்கி...கோட்டைக் கழற்றி புத்தக அலமாரிமீது போடுகிறான். சுவிட்சைப் போடுகிறான்.

ரகு சோபா நாற்காலியில் உட்காருகிறான். நிர்மலா சோபாவில் உட்காருகிறாள்.)

ரகு: புவர் ஜேம்ஸ்...

நிர்மலா: (திகைப்புடன்) புவர்?...

ரகு: ஜேம்ஸ்...

நிர்மலா: அவருக்கென்ன?

ரகு: ஹி ஈஸ் இன் ட்ரபிள்...

நிர்மலா: ட்ரபிளா, என்ன ஆச்சு?...

(ரகு டீபாயின் மீது கால்களைப் போட்டுக் கொள்கிறான்)

ரகு: எல்லா ஸெய்ன்ட்டுகளுக்கும் ஆற கதிதான்...

நிர்மலா: யு மீன்?

ரகு: சேரி பக்கத்திலே குடிசையெல்லாம் மூழ்கிப் போச்சு...ஒரே தண்ணிக்காடு... அங்கேயிருந்தவங்களையெல்லாம் கோயில்தான் பெரிசா இருக்கே...அங்கே இருக்கச் சொல்லலாம்னு ஊர் பெரியவாளைக் கேட்டிருக்கார், ஜேம்ஸ்...ஒரேயடியா அவா முடியாதுண்ணுட்டாளாம். இதுக்குள்ளே அந்தச் சேரி ஜனம் ஜேம்ஸ் முயற்சி பண்றார்னு தெரிஞ்சு, கோயிலுக்குள்ளே பூந்துண்டுட்டா...அவ்வளவுதான் கோயில் பரிசுத்தம் பாழாப் போச்சுன்னு ஒரே ரகளை...ஜேம்ஸை பிடி, உதைன்னு கூப்பாடு...

நிர்மலா: ஜேம்ஸ்தான் இந்த ஊருக்குத் தெய்வமாச்சே!

ரகு: தெய்வத்தைத் தூக்கி வெளியிலே எறிஞ்சாச்சு...ஜாதி, சம்பிரதாயம் இதெல்லாம் பாக்காத தெய்வம் என்ன தெய்வம்?...அதோட மட்டுமில்லே.. இத்தனை நாள் ஜேம்ஸ் இலவசமா மருந்து கொடுத்திண்டிருந்த வரையிலும், அவர் கிறிஸ்துவர்னு

அவங்களுக்குப் புரியலே...இப்பொத்தான் கிறிஸ்துவப்பய, வேணும்னு செஞ்சுட்டான்னு பழி...

நிர்மலா: ஜேம்ஸ் எங்கே இருக்கார் இப்போ, அவரை நீ பாத்தியா?...

ரகு: வீட்டிலேதான் இருக்கார். அவர்தான் கோயில்லே இருக்கிற ஜனங்களை வெளியேத்தணும்னு ஊர்ப் பெரியவா அவருக்கு உத்தரவு போட்டிருக்கா.. ஜேம்ஸ் ஈஸ் எ வெரி ஸாட் மான் நௌ...

நிர்மலா; நீ அவரோடப் பேசவே இல்லியா?...

ரகு: அவரை இங்கே வரச் சொல்லியிருக்கேன்...

நிர்மலா: அவராலே இப்பொ இங்கே வரமுடியுமா?

ரகு: வரேன்னுர்...

(சிறிது மௌனம்)

நிர்மலா: ஐ திங்க்...

ரகு: எஸ்?...

நிர்மலா: அவராலே இந்தச் சூழ்நிலையிலே இந்த ஊரைவிட்டு வர்றதைத் தவிர வேற வழி இருக்கிறதா எனக்குத் தெரியலே...

(ரகு புன்னகை செய்கிருன்)

நிர்மலா: எதுக்காகச் சிரிக்கறே?...

ரகு: (ஏளனமாக) ஜேம்ஸ் பேரிலே உனக்கு என்ன அக்கறை?... (அவன் சிகரெட் பற்ற வைக்கிருன்)

நிர்மலா: டோண்ட் பி ஸர்காஸ்டிக்...வாஸ்தவமா கேக்கறேன், மறுபடியும் அவராலே இந்த ஊர்லே தான்தான் ஜீஸஸ்னு நினைச்சிண்டு இருக்க முடியுமா...

ரகு: இப்பத்தான் அவர் ஜீஸஸ்..சிலுவையைக் கையிலே கொடுத்தாச்சு...சுத்தறதும், சுத்தாமலிருக்கிறதும் அவரோட இஷ்டம்...

(நிர்மலா பதில் கூறவில்லை. எங்கேயோ பார்த்துக் கொண்டு சிந்திக்கிருள். ரகு புத்தக அலமாரியிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு வந்து உட்காருகிருன். கால்களை டீபாயின் மீது போட்டுக் கொண்டு படிக்கத் தொடங்குகிருள்)

நிர்மலா: அவர் என்ன செய்வார்னு நீ நினைக்கறே?

ரகு: நான் அவரோட கொஞ்ச நேரந்தான் பேசிண்டிருந்தேன் ...பட் (அவன் நிறுத்துகிருன்)

நிர்மலா: பட்...

ரகு: தான் சொல்றதை இந்த முட்டாள் ஜனங்களாலே புரிஞ்சுக்க முடியும்னு அவர் நம்பிண்டிருக்கிறதா தெரியறது...கோபத்தைக் காட்டிலும் அவருக்கு வேதனைதான் ஜாஸ்தியா இருக்கு...

நிர்மலா: இதான் இந்த முட்டாள் துறவிகள்கிட்டே கஷ்டம்...தாங்க சொல்லறதை தாங்களே ஸீரியஸா நினைச்சிண்டு...

ரகு: அவரைப்பத்தி இந்த மாதிரி அபிப்பிராயம் வெச்சிண்டு, அவர் உனக்கு ஏதோ ஒரு காரணத்துக்காக வேணுங்கிறத்துக்காக...

நிர்மலா: (இடைமறிக்கிருள்) என்ன காரணத்துக்காக?...

ரகு: உன்கிட்டேயிருந்து நீ தப்பிச்சுக்க அவர் உனக்கு வேணும், அவ்வளவுதானே?...

(ரகு புத்தகத்தை டீபாயின் மீது வைக்கிருன். புன்னகை செய்கிருன்... நிர்மலா அவனை மௌனமாகப் பார்க்கிருள். சிறிது நேரம் மௌனம்)

ரகு: எனக்கே இந்த மாதிரி அனுபவம் உண்டு...

நிர்மலா: எந்த மாதிரி?...

ரகு: எனக்கு பெங்களூர்லே ஒரு சிநேகிதன் உண்டு...சரியான அப்பாவி...எப்பெப்போ எனக்கே என் நடவடிக்கையெல்லாம் அளவுக்கு மீறிப்போச்சுன்னு நினைக்கிறேனோ, அப்பொல்லாம் அவன்கிட்டே போய், அவன் பேசற அப்பாவித்தனமான பேச்செல் லாம் கேட்டுண்டு சிரிச்சிண்டிருப்பேன்...எனக்கு இது ஒருவிதமான தண்டனைன்னு வேணுமானுலும் வெச்சுக்கலாம்...

நிர்மலா: ஜேம்ஸ் ஒரு அப்பாவி இல்லே...

ரகு: அப்பாவி இல்லே..ஒரு துறவி...துறவிக்கான அரிப்பு இருக்கு இல்லையா?...

நிர்மலா: (சற்று உரக்க) ரகு...ப்ளீஸ்...

(அவள் இதைச் சொல்லிவிட்டு ஜன்னலருகே போய் நிற்கிருள். சற்று தயக்கத் துக்குப் பிறகு ஜன்னல் கதவுகளைத் திறக்கிருள்)

நிர்மலா: டாமிட்...இன்னுமா மழை பேஞ்சுண்டிருக்கு?...எப்பொ நிக்கப் போறது, இந்தச் சனியன்?...

ரகு: மழையா?...நான் வரபோது மழை இல்லியே...

(அவன் அவளருகே சென்று நிற்கிருன். வெளியே பார்க்கிருன். மழை இல்லை)

ரகு: மழை நின்னு போச்சு..நிர்மலா, என்ன சொல்றே நீ?

நிர்மலா: மழை இல்லியா?...இன்னும் பேஞ்சுண்டிருக்கு..சத்தம் கேக்கலே?...அப்பா பேசற மாதிரி நசநசன்னு...

ரகு: (அவள் தோள்களைத் தொட்டு) நிர்மலா...கம் ஆன்...யு டேக் ரெஸ்ட்...யு ஆர் நாட் வெல்...

நிர்மலா: யாருக்கு உடம்பு சரியில்லே? மழை பெய்யறது, சத்தம் கேக்கலே?...

(ரகு ஜன்னல் கதவுகளைச் சாத்துகிருன்)

ரகு: வா...கொஞ்ச நேரம் தூங்கு...யு ஆர் டையர்ட்...

(ரகு அவளை அழைத்துக் கொண்டு சோபா அருகே வருகிருன். அவள் சிறிது நேரம் மௌனமாக இருக்கிருள். பிறகு அப்படியே சாய்ந்துக் கொள்கிருள். கண் கள் மூடுகின்றன. ரகு புத்தகத்தை எடுத்துப் படிக்கத் தொடங்குகிருன். இன் ஞெரு சிகரெட் பற்ற வைத்துக் கொள்கிருன். சிறிது நேரம் கழித்து, சாய்வு நாற்காலியைப் பார்க்கிருன். நிர்மலாவைத் தொட்டு எழுப்புகிருன்)

ரகு: நிர்மலா...நிர்மலா...

(அவள் கண்களை லேசாகத் திறந்து பார்க்கிறாள்)

ரகு: வா...ஈஸிசேர்லே படுத்துக்கோ...ரிலாக்ஸ்...

(அவள் தூக்கத்தில் நடப்பதுபோல் செல்கிறாள். சாய்வு நாற்காலியில் படுக்கிறாள். கண்கள் மூடுகின்றன. ரகு சோபா நாற்காலியில் வந்து உட்காருகிறான். புத்தகத்தை எடுக்கிறான். படிக்க ஆரம்பிக்கிறான். இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு வாசல் கதவு தட்டப்படுகிறது. ரகு எழுந்து சென்று கதவைத் திறக்கிறான். ஜேம்ஸ் உள்ளே வருகிறார்...கையிலிருக்கும் குடையை ஓரமாக வைக்கிறார்)

ரகு: ஸோ...யு மானேஜ்ட் டு கம்...

ஜேம்ஸ்: எஸ்...ஜஸ்ட் மானேஜ்ட்...நிர்மலா எங்கே?...

(ரகு பின்னால் சுட்டிக் காட்டுகிறான்)

ஜேம்ஸ்: தூங்கறாங்களா?

ரகு: எஸ்...

(ஜேம்ஸ் சோபா நாற்காலியில் உட்காருகிறார். ரகு சோபாவில் உட்காருகிறான்)

ஜேம்ஸ்: ஒரு அரை மணி நேரம், 'பர்மிஷன்' வாங்கிட்டு வந்தேன்... மறுபடியும் போகணும்?...

ரகு: எங்கே?...

ஜேம்ஸ்: மழை நின்னுப்போச்சு இல்லே?...கோயில்லே இருக்கிற ஜனங்களை நல்ல வார்த்தை சொல்லி, என் வீட்டுக்கு அழைச்சிகிட்டுப் போகலாம்னு பாக்கறேன்.

ரகு: உங்க வீடு போறல்லேன்னா, இங்கே அழைச்சிண்டு வாங்க...எனக்கு ஆட்சேபணை இல்லே..

ஜேம்ஸ்: இங்கேயே? (புன்னகையுடன்) தொலைஞ்சேன்...

ரகு: ஏன் இப்படிச் சொல்றீங்க? அக்கிரஹாரம்னு சொல்றீங்களா? இது ஒண்ணும் பழங்காலம் இல்லியே.. இப்பொத்தான் எல்லாரும் இருக்காங்களே...

ஜேம்ஸ்: அக்கிரஹார மனப்பான்மைன்னா பிராமணர்களுக்கு மட்டுந்தான் இருக்கணும்கிற அவசியமில்லே...படி ஏறி மேலே வந்தவங்க, ஏணிக்குக் கீழே இருக்கிறவங்களை ஏளனமாப் பாக்கறதான் சகஜம்...

ரகு: நான் வீட்டிலே யாரைக் கூட்டி வைச்சிண்டா என்ன? அதைப்பத்தி இந்தத் தெருக்காரங்களுக்கு என்ன ஆட்சேபணை?...

ஜேம்ஸ்: இங்கே நாலாவது வீட்டிலே இருக்காரே மளிகைக் கோனாரு, அவரே உங்களைக் கிழிச்சுப் போட்டுடுவாரு...அக்கிரஹாரத்திலே பறையனான்னு ..அவர் அக்கிரஹாரத்திலே பூந்துட்டாரில்லே, அதுபோறும், அவரும் பூணூல் மாட்டிகிட்ட மாதிரி... திஸ் ஈஸ் எ ரெட்சட் வில்லேஜ், திஸ் ஈஸ் எ ரெட்சட் கன்ட்ரி...

ரகு: நான் கொஞ்ச நேரத்துக்கு முன்னாலே இதைத்தான் சொன்னேன், நிர்மலா கிட்டே 'திஸ் ஈஸ் எ ரெட்சட் வில்லேஜ்'னு...

ஜேம்ஸ்: ஏன் அப்படிச் சொன்னீங்க? சந்தர்ப்பம்?...

ரகு: இப்படியா ஓயாம மழை பெய்யும், இருபது நாளா? எங்கப்பா ஏன் இந்தக் கிராமத்தைத் தேடிண்டு வந்தாரோ...தெரியலே.

ஜேம்ஸ்: அவருக்கு இந்தக் கிராமம் பிடிச்சிருந்தது... நிர்மலாக்குத்தான் பிடிக்கலே...

ரகு: அவ இந்தக் கிராமத்தை விட்டுப் போகணும்னு ஃபீல் பண்ரு...

ஜேம்ஸ்: ஐ ஸீ...

(ரகு சிகரெட் பற்ற வைக்கிருன். எழுந்து போய் தான் படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை அலமாரியில் வைக்கிருன்)

ரகு: (புத்தகத்தை வைத்துக் கொண்டே) இது உங்களைப் பொறுத்தது...

ஜேம்ஸ்: (திடுக்கிட்டு) எது?...

ரகு: அவ கிராமத்தை விட்டுப் போறது...நான் சொல்லறது உங்களுக்குப் புரியறது... என்ன பதில் சொல்லறதுன்னு யோஜிக்கத்தான் பதில் கேள்வி போட றீங்கன்னு நினைக்கறேன்.

(ஜேம்ஸ் பதில் கூறவில்லை. சிறிது நேரம் மௌனம்)

(ரகு மறுபடியும் வந்து சோபாவில் உட்காருகிருன்)

ரகு: நிர்மலாவும் நானும் இதைப்பத்தி இத்தனை நாழி பேசிண்டிருந்தோம்...நிர்மலா நீட்ஸ் யு பேட்லி...

ஜேம்ஸ்: எனக்கு இப்பொ ஏற்பட்டிருக்கிற சூழ்நிலையிலே இம்பல்ஸிவா, நிர்மலாவோட, நானும் இந்தக் கிராமத்தை விட்டுப் புறப்பட்டுடலாம்.. ஆனு வேறெரு காரணத் துக்காக உணர்ச்சி வசப்பட்டு, நிர்மலாவோட போறத்தைப்பத்தி முடிவு செய்யறது நியாயமா?

ரகு: நிர்மலா உங்களோட இதைப்பத்திப் பேசினதா சொன்னுளே...

ஜேம்ஸ்: பேசினுங்க.. உங்க ஃபாதர் போறத்துக்கு முன்னுலேதான் இதைப்பத்திப் பேசிண்டி ருந்தோம்...நிர்மலா என்ன சொன்னுங்க தெரியுமா?...ஐ டின்ட் லைக் இட்...

ரகு: என்ன சொன்னு, நிர்மலா?...

ஜேம்ஸ்: 'டாக்டர் ஐ நீட் எ மான்...அது நீங்களாகவே இருக்கலாம்'...அப்படின்னுங்க. இதை எப்படி அர்த்தம் பண்ணிக்கிறதுன்னு எனக்குப் புரியலே...

ரகு: எப்படிச் சொல்லணும்கிறீங்க? அவள் உங்களை.. (நிறுத்துகிருன் புன்னகையுடன்)

ஜேம்ஸ்: கம் ஆன், சொல்லி முடியுங்க, பரவாயில்லே...

ரகு: 'டாக்டர் உங்களை நான் காதலிக்கிறேன்'னு அவ சொல்லணும்னு எதிர்பார்கறீங் களா?

(ஜேம்ஸ் புன்னகை செய்கிருர்)

ரகு: வாட் டு யு திங் ஆஃப் நிர்மலா?...

ஜேம்ஸ்: வாட் டு யு திங்க் ஆஃப் மீ?...காதலைப்பத்தி வார்த்தையோ, இல்லாட்டிக் கடுதாசோ மாத்திக்கற வயசுன்னு பாக்கறீங்களா? எனக்கும் உங்க வயசுதான் ஆவுது... உங்கப்பாவே சொன்னுரு...ஒரு பொண்ணு உங்ககிட்டே வந்து திடீர்னு 'எனக்கு ஒரு ஆள் வேணும்'னு கேட்டா நீங்க என்ன பதில் சொல்லுவீங்க?...

ரகு: (புன்னகையுடன்) பொறுப்பைச் சுமத்தாத எந்த அழைப்பையும் நான் மறுக்கறது இல்லே, டாக்டர்...

ஜேம்ஸ்: இது உங்க தங்கையைப் பத்திய விஷயம்னு இருந்தாலும், நீங்க இப்படி... (நிறுத்துகிருர்)

ரகு: ஹூம்... சும்மா சொல்லுங்க...

ஜேம்ஸ்: கண்ணியமா பேசக்கூடாதுன்னு ஏன் பிடிவாதமா இருக்கீங்களோ தெரியலே...

(ரகு புன்னகை செய்துக் கொண்டே எழுந்திருக்கிருன். நிர்மலா அருகே சென்று பார்க்கிருன். அவள் கண்கள்மூடியிருக்கின்றன. மறுபடியும் ஜேம்ஸிடம் வருகிருன்)

ரகு: அசந்து தூங்கிண்டிருக்கா...

ஜேம்ஸ்: லெட் ஹர் ஸ்லீப்...

ரகு: சரி அவ எழுந்தப்புறம் அவகிட்டே நான் என்ன பதில் சொல்றது, சொல்லுங்க.

ஜேம்ஸ்: எதைப்பத்தி?...

ரகு: எதைப்பத்தியா?...நிர்மலா கூட நீங்களும் இந்தக் கிராமத்தை விட்டுப் புறப்படத் தயாரா?...

(ஜேம்ஸ் பதில் சொல்லாமல் சிறிது நேரம் யோசிக்கிருர். ரகு அவரையே பார்த்துக் கொண்டிருக்கிருன்)

ஜேம்ஸ்: இதைப்பத்தி அன்னிக்கி உங்க ஃபாதர் போன அன்னிக்கு பேசிக்கிட்டிருந்தோம் அது ஒரு பயங்கரக் கனவு மாதிரி இருக்குது...

ரகு: பயங்கரக் கனவா?...

ஜேம்ஸ்: எஸ். நிர்மலா சொல்லிண்டே இருந்தாங்க... 'ஐ ஹேட் ஹிம், ஐ ஹேட் ஹிம்'னு. அவங்களோட நேரடியான கேள்விக்கு நான் பதில் சொல்லத்தயாரா இல்லே... நம்ம முதல் கடமை ப்ரொஃபஸர்தான்னேன், அதுக்கு அவங்க சீறி விழுந்தாங்க... அப்போ விளக்கு அணேந்தது...இடியும், மின்னலுமா ஒரே மழை.. இருட்டிலே தட்டுத் தடுமாறிகிட்டு உங்கப்பாகிட்டே போனேன். விளக்கு வந்தது...நிர்மலா உள்ளேர்ந்து மெழுகுவர்த்தி கொளுத்திக்கிட்டு வந்தாங்க...அண்ட் யுவர் ஃபாதர் வாஸ் டெட்...கார்டியாக் அரெஸ்ட்...மாஸிவ் ஹார்ட் அட்டாக்....

ரகு: நீங்க ஏற்கனவே அவரை 'செக் அப்' பண்ணினப்புறந்தானே பேசிண்டிருந்தீங்க. அப்பொ அவர் எப்படி இருந்தார்?

ஜேம்ஸ்: 'ப்ளட் பிரஷர்'தான் இருந்தது...பட்...

(ரகு சிகரெட் பற்ற வைக்கிருன்)

ரகு: வாட் பட்?...பர்ஹாப்ஸ், நீங்க ரெண்டுபேரும் பேசிண்டிருந்தது, அதுவும் நிர்மலா, 'ஐ ஹேட் ஹிம், ஐ ஹேட் ஹிம்'னு சொன்னது அவருக்கு ஏன் ஒரு அதிர்ச்சியா இருந்திருக்கக் கூடாது?...

ஜேம்ஸ்: அவரு தூங்கிண்டிருத்தாரு, நாங்க பேசறப்போ...

ரகு: அப்படீன்னு நீங்க நினேச்சிண்டிருந்தீங்க...அவர் தூங்கலேயோ என்னவோ... நிர்மலாவுக்கு அவர் தூங்கலேன்னு நிச்சயமா தெரிஞ்சிருக்கலாம்...அப்படித் தெரிஞ்சுதான்...

ஜேம்ஸ்: (திடுக்கிட்டு) யு மீன்?...

(ரகு எழுந்து போய் நிர்மலா படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை எடுத்துக் கொண்டு வருகிருன். அதை ஜேம்ஸிடம் நீட்டுகிருன்)

ஜேம்ஸ்: என்ன இது?...

ரகு: நிர்மலா கார்த்தாலே படிச்சிண்டிருந்த புத்தகம்...தி எத்னிக் அண்ட் ஸோஷியலாஜிகல் ஆஸ்பெக்ட்ஸ் ஆஃப் மர்டர்ஸ் அண்ட் அதர் க்ரைம்ஸ்

ஜேம்ஸ்: ஸோ வாட்?...

ரகு: யு நோ வாட் ஈஸ் வாட்... நிர்மலா அப்பாவைத் தான் கொலைப் பண்ணிட்டதா நிச்சியமா நம்பறு, இப்படி ஓயாமெ மழை பேஞ்சுண்டிருக்கிறது அவளுக்கு அப்பா இன்னும் உயிரோட இருந்து நசநசன்னு பேசிண்டிருக்கிற மாதிரி இருக்கு...

ஜேம்ஸ்: மிஸ்டர் ரகு, நீங்க சொல்லறது வாஸ்தவமா?...

ரகு: எது வாஸ்தவமா?...

ஜேம்ஸ்: நிர்மலா அப்படி நினைச்சிட்டிருக்கான்னீங்களே, அது...

ரகு: என்ன இப்படிக் கேக்கறீங்க, டாக்டர்? ஒருவேளை நான் இந்த எண்ணத்தை அவ மனசிலேயே புகுத்தினேன்னு நினைக்கிறீங்களா?

ஜேம்ஸ்: அன்னிக்கி...(நிறுத்துகிறார்)

ரகு: ஹூம்.. சொல்லுங்க...

ஜேம்ஸ்: அன்னிக்கி...விளக்கு வர்றதும், நிர்மலா உள்ளேந்து மெழுகு வர்த்தி கொளுத்திக் கொண்டாந்ததும் ஒரே சமயத்திலே நடந்தது...அப்போது நான் உங்க ஃபாதர் நாடியைப் பாத்துக்கிட்டிருந்தேன்...கை தொப்புன்னு விழுந்தது...அப்பொ நிர்மலா அதைப் பார்த்த உடனே, கொஞ்சங்கூட பதட்டப்படாமெ மெழுகு வர்த்தியை 'பாடி' கிட்டே இரண்டு பக்கத்திலும் வைச்சாங்க அப்பொ நான் இவங்களுக்கு எவ்வளவு ஸ்ட்ராங் மைன்ட்'னு நினைச்சேன்...

ரகு: அப்பொ என்ன சொல்றீங்க?.. நிர்மலாவுக்கு அப்பா போனது முன்னுலியே தெரியுங்கிறீங்களா? இல்லாட்டா, விளக்குப் போன நேரத்திலே அவ போய்...

ஜேம்ஸ்: (உரக்க) மிஸ்டர் ரகு...வாட் ஆர் யு டாக்கிங்?...

(ரகு புன்னகை செய்து கொண்டே தான் கொண்டு வந்த புத்தகத்தை எடுத்துக் கொண்டு போய் அலமாரியில் வைக்கிறான். நிர்மலா அருகே சென்று பார்க்கிறான். அவள் அசைகிறாள்)

ரகு: நிர்மலா...யு ஃபீல் பெட்டர் நௌ...

நிர்மலா: எஸ் . (கண்களைத் திறக்கிறாள்)

ரகு: டாக்டர் ஜேம்ஸ் வந்திருக்கார்

(டாக்டர் ஜேம்ஸ் அவளைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்)

ஜேம்ஸ்: நான் வந்து கொஞ்ச நேரமாவுது...நீங்க தூங்கிட்டிருக்கீங்கன்னுரு... 'டிஸ்டர்ப்' பண்ண வேண்டாம்னு பார்த்தேன்...

(நிர்மலா எழுந்திருக்கிறாள்)

ஜேம்ஸ்: பரவாயில்லே, நீங்க படுத்துக்கங்க...

(நிர்மலா பதில் கூறுமல் சோபாவை நோக்கி வருகிறாள்)

நிர்மலா: மழை நின்னு போச்சா, டாக்டர்...

ஜேம்ஸ்: நின்னு போச்சுது...

நிர்மலா: நிஜமாவா.. (எழுந்திருக்கிருள்)

(அவள் ஜன்னலருகே போய்க் கதவைத் திறக்கிருள்)

நிர்மலா: மழை பேயறது தெரியலே, சத்தம் கேக்கறது டாக்டர்...

(ஜேம்ஸ் நிர்மலா அருகேபோய் நிற்கிருர். ரகு சிகரெட் குடித்துக் கொண்டே சாய்வு நாற்காலியில் படுக்கிருன்)

ஜேம்ஸ்; மழை நின்னு போச்சுது, நிர்மலா...என்ன இப்படிச் சத்தம் கேக்குதுங்கிறீங்க?...

நிர்மலா: ரகு சொன்னது வாஸ்தவந்தான்...அப்பாதான் போறத்துக்கு இஷ்டமில்லாமெ, இன்னும் மழையா பேய்ஞ்சுஞ்ண்டிருக்கார். (தனக்குத்தானே பேசுவதுபோல்)

ஜேம்ஸ்: நிர்மலா, வாங்க இப்படி...

(அவர் ஜன்னல் கதவுகளைச் சாத்துகிருர். நிர்மலா கையைக் கட்டிக் கொண்டு மூடின ஜன்னலைப் பார்த்துக் கொண்டிருக்கிருள்)

ஜேம்ஸ்: நிர்மலா...சொல்லறதைக் கேளுங்க, சோபாவிலே வந்து உட்காருங்க...

(ஜேம்ஸ் ரகுவிடம் வருகிருர். நிர்மலா சோபாவில் போய் உட்காருகிருள்)

ஜேம்ஸ்: (மெதுவாக) தயவுசெய்து, நாற்காலியை விட்டு எழுந்திருங்க...

ரகு: (ஆச்சர்யத்துடன்) ஏன்?...

ஜேம்ஸ்: ஏற்கனவே அவங்களுக்கு (நிர்மலாவைப் பார்க்கிருர்) என்னென்னவோ 'அப்ஸெஷன்'லாம் இருக்குது... நீங்க வேற இப்படி இந்த நாற்காலியில் உட்கார்ந்துகிட்டு...

நிர்மலா: யாரும் என்னைப் பயமுறுத்த முடியாது, டாக்டர். (சிரிக்கிருள்) ரகு ப்ளீஸ் ரிலாக்ஸ், ரிலாக்ஸ்...யு நீட் ரெஸ்ட் (சிரிக்கிருள்)

(ஜேம்ஸ் ரகு இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்கின்றனர். ஜேம்ஸ் அவளருகே சென்று சோபா நாற்காலியில் உட்காருகிருர்)

ஜேம்ஸ்: யாருக்கு 'ரெஸ்ட்' வேணுங்கிறீங்க?

நிர்மலா: உங்க ரெண்டு பேருக்கும், இன் ஃபாக்ட்...ஐ ஆம் ஆல்ரைட்...நீங்க என்னேட வராட்டாலும், டோன்ட் வொர்ரி, ஐ ஹாவ் கம்பெனி...

ஜேம்ஸ்: யாரு?...

நிர்மலா: நான் போற எடத்துக்கெல்லாம் மழை பெய்யும்...நான் ரிஷ்யசிங்கர்...ஆர் பர்ஹாப்ஸ் நீங்கதான் ரிஷ்யசிங்கரா?...(சிரிக்கிருள்)

ஜேம்ஸ்: நிர்மலா...ப்ளீஸ்...நான் சொல்லறதைக் கேளுங்க...

நிர்மலா: (இடைமறிக்கிருள்) நீங்க என்னேட இந்தக் கிராமத்தை விட்டு வரப் போறீங்களா, இல்லியா?...

ஜேம்ஸ்: நான்தான் உங்களுக்குத் துணையா வேணும்னு நீங்க நிச்சயமா நினைக்கிறீங்களா?

(ரகு எழுந்து வருகிருன். இன்னெரு சிகரெட் பற்ற வைக்கிருன். அவன் சோபாவின் பின்னல் நிற்கிருன்)

நிர்மலா: எஸ்...நான் என்னோட அப்பாவைக் கொன்னுட்டேன். நீங்க இந்த ஊர் ஜனங்களைத் திருப்தி பண்ணறதுக்காக உண்டாக்கிண்ட உங்களோட 'இமேஜை'க் கொன்னுட்டேள்...வி நீட் ஈச் அதர்...

ரகு: குட் லாஜிக்...

ஜேம்ஸ்: நிர்மலா, நீங்க சொல்றது எனக்குப் புரியலே.

(ரகு முன்பக்கமாக வந்து சோபாவில் உட்காருகிறான்)

ரகு: அவ சொல்லறது எனக்குப் புரியறது.. நிர்மலா மானஸிகமா, ஒரு கொலை பண்ணியிருக்கா...நீங்க உங்க மானஸிகத்தைக் கொலை பண்ணிட்டேள்...

நிர்மலா: வாட் டு யு மீன்? நான் மானஸிகமா கொலை பண்ணலே, ஐ நோ ஐ ஹாவ் கில்ட் மை ஃபாதர்...எஸ், ஐ ஹாவ் கில்ட் ஹிம்...

ரகு: நோ...யு ஹாவ் நாட் கில்ட் எனிபடி....நீ ஏதோ மனசிலே நினைச்சிண்டு அதைப் பிடிவாதமா நம்பணும்னு பாக்கறே...

நிர்மலா: நான் ஒன்னும் நினைச்சுக்கலே...என்ன நடந்ததுன்னு எனக்குத் தெரியும். ஜேம்ஸ்! ..கொலைகாரி கூட இருக்கிறத்திலே உங்களுக்குச் சம்மதந்தானே?

ஜேம்ஸ்: டோன்ட் பி க்ருயல். தன்னைக்கண்டு தானே பரிதாபப்படறது உங்களுக்குப் பிடிக்காத விஷயம்னு ஒரு தடவை நீங்க சொன்னீங்க...இது அதைவிட மோசம்... தன்னைத்தானே சித்ரவதை செய்துக்கிறது...

நிர்மலா: என்னைக் கண்டு பயமா இருக்கா, டாக்டர்?

ஜேம்ஸ்: உங்களைக் கண்டு என்ன பயம்? நீங்க மனசிலே தானா ஏதோ நினைச்சிகிட்டு உழப்பிகிட்டிருந்தீங்கன்னா, அதுக்கெல்லாம் யாராவது பயப்படுவாங்களா? உங்க ஃபாதர் ஹார்ட் அட்டாக்லே போனார்னு எனக்குத் தெரியும்...நான் பக்கத்திலே இருந்திருக்கேன்...

நிர்மலா: கழுத்தை நெரிச்சுக் கொன்னாத்தான் கொலையா, டாக்டர்? அப்பாவை அன்னிக் காலம்பறலேந்து போறதுக்கு நான் தயார் பண்ணினேன். இன்னொருவிஷயம்...நாம் பேசிண்டிருந்தபோது, அவர் தூங்கலேன்னு எனக்கு நிச்சயமாத் தெரியும்...

(அவள் கண்களை மூடிக்கொள்கிறாள்)

ஜேம்ஸ்: ரியலி?...

(நிர்மலா பதில் கூறாமல் சலனமற்று உட்கார்ந்திருக்கிறாள்)

ரகு: (சில விநாடிகளுக்குப் பிறகு) அவளுக்கு வேண்டியது, இடமாற்றமும், 'ரெஸ்டு'ந்தான் ..என்னோட பெங்களூர் வான்னேன்...அவளுக்கு வர இஷ்டமில்லே...

(நிர்மலா கண்களைத் திறக்கிறாள்)

நிர்மலா: நான் உன்னோட பெங்களூருக்கு வரதும், ஜேம்ஸோட மெட்ராஸ் போறதும் ஒண்ணுதுமா, ரகு?

ரகு: (கோபத்துடன்) டோன்ட் பி ஸில்லி...

ஜேம்ஸ்: சரி, நானும் இப்ப ஊரை விட்டுப் புறப்படணும்கிறீங்க...

நிர்மலா; வொய் நாட்? இந்த ஊர்லே தெய்வமா கோயிலுக்குள்ளே உட்காரப் பாத்தேள்... உங்களைத் தூக்கிக் கோயிலுக்கு வெளியே எறிஞ்சுட்டா இந்த ஊர் ஜனங்க... இனிமே உங்களுக்கு என்ன வேலை...

ஜேம்ஸ்: ஆல்ரைட், ஆல்ரைட்...உங்க கூட நானும் வரேன்...பட்...

நிர்மலா: வாட் பட்?...

(அப்பொழுது வாசல் கதவு தட்டப்படுகிறது)

ஜேம்ஸ்: எனக்காகத்தானிருக்கும்...கோயில்லே இருக்கிறவங்களை என் வீட்டுக்கு அனுப்பி விட்டு வரேன்...

(ஜேம்ஸ் எழுந்திருக்கிருர்)

ரகு: இந்த வீட்டுக்கு அழைச்சிண்டு வரத்திலேயும் எனக்கு ஆட்சேபணை இல்லை

(ரகுவும் எழுந்திருக்கிருன்)

நிர்மலா: யாரை?

ரகு: அதான் குடிசை போய் தவிக்கிற ஜனங்களை...

நிர்மலா: இங்கேயா, இந்த வீட்டிலியா? நதிங் டூயிங்...நான் இங்கே இருக்கிறவரையும் வேணும்...ஐ கான்ட் ஸ்டான்ட் தெம்...

(ஜேம்ஸ் கதவைத் திறக்கப் போனவர் திரும்பிப் பார்க்கிருர்)

நிர்மலா: உனக்கென்ன அவ்வளவு 'இன்ட்டரஸ்ட்' ரகு, இந்த வீட்டை அசிங்கப் படுத்தணும்னு?

ஜேம்ஸ்: (கோபத்துடன்) அதென்ன இப்படித் தூக்கியெறிஞ்சு பேசறீங்க...ஹரிஜன்னு உங்களுக்கு...?

நிர்மலா: நோ...இது ஹரிஜன் பிரச்னை இல்லே, கொஸ்டின் ஆஃப் ஹைஜின்...

ஜேம்ஸ்: ஹைஜின்கிறது உடம்புக்குமட்டுமில்லே, மனசுக்கும்வேணும், நிர்மலா...ஐ டோன்ட் லைக் யுவர் ஆட்டிடியுட்...

(கதவு மறுபடியும் தட்டப்படுகிறது. ஜேம்ஸ் வெளியே போகிருர். ரகு வாசல்மட்டும் போனவன் திரும்பி வருகிருன்)

ரகு: இடம் இல்லாமெ தவிக்கிறவங்களுக்கு நம்ம வீட்டுத் திண்ணையை கொடுத்தா குடி முழுகியாப்போயிடும்?...உனக்கும் இந்த ஊர்ப் பெரியவான்னு பேரை வைச் சிண்டிருக்காளே அவாளுக்கும் என்ன வித்தியாசம்?

நிர்மலா: எனக்குக் கூட்டத்தைக் கண்டா பிடிக்கலே...அதுவும் சேரி ஜனங்கள்னுகேக்க வேணும்.. நான் இந்த வீட்டை விட்டுப் போனப்புறம் இந்த வீட்டையே அவாளுக் குத் தானமா கொடு...ஐ டோன்ட் மைன்ட்...

ரகு: நீ நிஜமாகவே ஒரு 'க்ருயல் பர்ஸன்'தான் சந்தேகமில்லே...

நிர்மலா: எஸ்...ஐ ஹாவ் கில்ட் மை...

ரகு: (இடைமறிக்கிருன்) ஸ்டாப் இட்...ஐ ஆம் டையர்ட் ஆஃப் இட்...

(ரகு கால்களை டீபாயின் மீது போட்டுக்கொண்டு சாய்ந்து உட்கார்ந்தவாறு சிகரெட் பற்ற வைக்கிருன்)

நிர்மலா: உனக்கு ஏன் இவ்வளவு எரிச்சல், ரகு?...இப்பொவே அந்தச் சேரி ஜனங்களை இந்த வீட்டுக்கு அழைச்சிண்டு வரணும்னு நீ நினைச்சியானு, நான் குறுக்கே நிக்க விரும்பலே. .நான் வீட்டை விட்டுப் போறேன், அவ்வளவுதானே? ஆனு எனக்கு ஒரு விஷயம் ஆச்சர்யமாயிருக்கு, உனக்கும் ஜேம்ஸ் மாதிரி...

ரகு: (இடைமறித்து) நோ இட் ஈஸ் டிஃபரண்ட்...இதை ஒரு சமுகப்பிரச்னையாகவோ அல்லது சீர்திருத்தப் பிரச்னையாகவோ நான் நினைக்கலே...ஜேம்ஸ் தம்மோட வீட்டைத் தரப் போறேன்னு சொன்னதும், இந்த வீட்டையும் உபயோகப்படுத்திக் கலாம்னு 'இம்பல்ஸிவா' சொன்னேன்... ஆனா அந்தச் சேரி ஜனங்களை அக்கிர காரத்திலே விடக்கூடாதுன்னு அக்கிரகாரத்திலே புதுசாப் பூந்துண்டவங்க சொல் வாங்கன்னும் அவர் சொன்னதும் எனக்கு எரிச்சல் வந்தது... ஸோ, இது ஒரு சவால் மாதிரிதான் எனக்கு...ஐ ஆம் நாட் வெரி என்தூஸியாஸ்டிக் அபௌட் ஸோஷல் ரிஃபார்ம்...பிகாஸ் ஜஸ்ட் ஐ டோன்ட் கேர்

நிர்மலா: அப்படின்னா... ஐ அக்ரி வித் யு... அவாள்ளாம் இங்கே இந்த வீட்டுக்கு வரத்தைப் பத்தி எனக்கும் ஆட்சேபணை இல்லே...கோ அன்ட் டெல் ஜேம்ஸ்...

ரகு: ஜேம்ஸ் எங்கே போயிட்டார்?...

(ரகு எழுந்து வாசல்பக்கம் போய்ப் பார்க்கிறான். கதவைச் சாத்திக்கொண்டு திரும்பி வருகிறான்)

ரகு: வந்தவங்க கூட அவர் போயிட்டார் போலிருக்கு...

நிர்மலா: நான் இன்னிக்கே இந்த ஊரை விட்டுப் போகலாம்னு பார்க்கிறேன்

ரகு: இன்னிக்கேவா? அது எப்படி முடியும்...ஸெட்டில்மென்ட் ஒண்ணும் செய்ய வேண்டாமா?

நிர்மலா: அதெல்லாம் நீ பார்த்துக்கோ...போடச் சொன்ன இடத்திலே கையெழுத்து போடறேன்

ரகு: ஜேம்ஸூம் உன் கூடவே இன்னிக்கு வருவார்னு நீ எதிர்பார்க்கறயா?

நிர்மலா: ஒய் நாட்?... அவர் வரேன்னு ஒப்புத்துண்டாரே...

ரகு: ஏன், இரண்டு, மூணு நாள் கழிச்சுப் போனா என்ன?...

நிர்மலா: (தீர்மானமாக) நோ...

ரகு: இன்னிக்கே ஜேம்ஸாலே புறப்பட முடியும்னு நான் நினைக்கலே...

நிர்மலா: இஸ் இட் யுவர் விஷ்?

ரகு: டோன்ட் பி ஸில்லி...

நிர்மலா: ஐ நோ... ஐ நோ... முன்னாலேயும் அப்பா இப்படித்தான் நான் ஒத்தரைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்னவுடனே 'அவன் ஏர்ஃபோர்ஸிலே இருக்கானே ரிஸ்க் இல்லியா?'ன்னு கேட்டா...ஹி டைட் இன் எ கிராஷ்...

ரகு: (கோபத்துடன்) வில் யு ஷட் அப்?...

நிர்மலா: அப்பா அவரைக் கொன்னார், நான் அப்பாவைக் கொன்னுட்டேன்...இதிலே தப்பு ஒண்ணும் இல்லே..

ரகு: நிர்மலா, கொஞ்ச நேரம் சும்மா இருக்க முடியாதா உன்னாலே?

(அவன் எழுந்துபோய் அவளருகில் உட்காருகிறான்)

நிர்மலா: (எங்கேயோ பார்த்துக் கொண்டே) நான் செஞ்சது ரைட்தானே?...

ரகு: ரைட்தான், தயவு செய்து சும்மா இரு...

(வாசல் கதவு தட்டப்படும் சப்தம்...ரகு எழுந்து போகிறுன். ஜேம்ஸ் உள்ளே வருகிருர்)

ரகு: அவங்க கூடவே போயிட்டிங்களா?

(ஜேம்ஸ் வந்து ஒன்றும் பேசாமல் சிறிது நேரம் நிர்மலாவையே பார்த்துக் கொண்டு நிற்கிருர். நிர்மலா அவரைக் கவனிக்கவில்லை. அவள் வெட்டவெளியைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிருள்)

ரகு: எல்லாரையும் உங்க வீட்டுக்கு அழைச்சிண்டு போய்ட்டீங்களா?

ஜேம்ஸ்: இல்லே...அவங்க கோயில்லேயே இருக்கலாம்னுட்டாங்க இந்த ஊர்ப் பெரியவங்க

ரகு: ரியலி...?

ஜேம்ஸ்: பட் ஸம் ஸாட் நியுஸ் ஐ ஹாவ் டு டெல் யு..

(நிர்மலா அவரை ஏறிட்டு நோக்குகிருள்)

ரகு: என்ன?...

ஜேம்ஸ்: ஊரிலே காலரா பரவ ஆரம்பிச்சிருக்கு...

நிர்மலா: ஸோ?...

ஜேம்ஸ்: நான் ஊரை விட்டுப் போய்டப் போறேன்னு சொன்ன உடனே விடமாட்டேனுட்டாங்க...ஜனங்க இப்படி அவஸ்தைப் படறப்போ எனக்கும் ஊரை விட்டுப் போக இஷ்டமில்லே... உயிர் பிரச்னைக்கு முன்னுலே, கடவுளைப்பத்தி அவங்களுக்கு அவ்வளவு அக்கறையில்லே...சேரி ஜனங்க கோயில்லேயே இருந்திட்டுப் போகட்டும்னுட்டாங்க...

ரகு: யு ஆர் ஷ்யூர் இட் ஈஸ் காலரா?

ஜேம்ஸ்: ஐ நோ இட் ஈஸ் காலரா; ஐ ஆம் இன் க்ரேட் ஹர்ரி ..சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்

நிர்மலா; (எழுந்து கொண்டே) எதைச் சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேள்?

ஜேம்ஸ்: இந்த ஊரைவிட்டு என்னுலே இப்பொ வர முடியாது...ஆனு நீங்க சீக்கிரம் போறது நல்லதுன்னு எனக்குப் படறது...அண்ட் மை ப்ளேஸ் ஈஸ் ஹியர்...

நிர்மலா: நீங்க வல்லேன்னு சொல்லுங்க...நாங்க சீக்கிரம் போறது தப்பா இல்லையான்னு அபிப்ராயம் சொல்ல வேண்டாம்

ரகு: (சற்று உரக்க) நிர்மலா...

நிர்மலா: ஆக்ஸிஜன் கொடுத்து உங்க இமேஜைக் காப்பாத்தின்டுட்டேள் இல்லியா? நேத்திக்கி கோயிலேந்து தூக்கி வெளியே எறிஞ்சா, இன்னிக்கு கோயிலுக்குள்ளே போய் மறுபடியும் பூந்துட்டேள்...கங்கிராச்சுலேஷன்ஸ்...

ஜேம்ஸ்: நீங்க என்ன சொன்னுலும் உங்களோட நான் வழக்காடப் போறதில்லே...யு ஆர் எ ஸிக் பர்ஸன்...

நிர்மலா; நான் ஸிக் பர்ஸனு?..,

ஜேம்ஸ்: எஸ்...வாழ்க்கையிலே நல்ல அம்சமும் இருக்குன்னு நம்ப மறுக்கிற பிடிவாதம்... என்னிக்காவது நீங்க, இரண்டு நாய்க்குட்டி விளையாடறதையோ, ஒரு குழந்தை சிரிக்கிறதையோ பார்த்து ரஸிச்சிருக்கிங்களா?...பட் ஐ கான் அன்டர்ஸ்டான்ட்... நீங்க வளர்ந்த சூழ்நிலைக் கோளாறு ..

நிர்மலா: ஷட் அப்...நீங்க என்னோடே வரமாட்டேள்னு அப்பவே எனக்குத் தெரியும்... யு ஆர் எ கவர்ட்...ஆல் செயின்ட்ஸ் ஆர் இம்பொடன்ட்...

ஜேம்ஸ்: (புன்னகையுடன்) நீங்க என்ன சொன்னாலும் நான் கோபப்படப் போறதில்லே.

நிர்மலா: நான்தான் எங்கப்பாவைக் கொன்னேன்ன உடனே பயந்துண்டு, சிலுவையைக் கையிலே தூக்கிண்டுட்டேள்...பெண்களைக் கண்டா காலராவைக் காட்டிலும் ஏன் இப்படி பயப்படறேள், டாக்டர்?...

ஜேம்ஸ்: நீங்கதான் உங்கப்பாவைக் கொன்னுட்டிங்கங்கறதை நான் நம்பலே... நீங்களே ஏதோ நினைச்சிகிட்டு...

நிர்மலா: எஸ், ஐ டிட், ஐ டிட்...(கத்துகிறாள்)

(ரகு அவளருகில் சென்று அவளை உட்கார வைக்கிறான். அவள் கைகளினால் முகத்தை மூடிக்கொண்டு அழுகிறாள். ரகு சைகையினால் ஜேம்ஸைப் போகச் சொல்லுகிறான். பிரித்த குடையை மடித்து எடுத்துக் கொண்டு அவர் போகிறார். ரகு சென்று கதவைச் சாத்திவிட்டு விளக்கை அணைக்கிறான். அரங்கத்தில் மங்கலான வெளிச்சம். சிறிது நேரம் கழித்து நிர்மலா கண்களை விழிக்கிறாள். எழுந்து ஜன்னலருகே போய் நிற்கிறாள். ஜன்னல் கதவைத் திறந்து பார்க்கிறாள்)

நிர்மலா: இன்னும் மழை பேஞ்சுண்டிருக்கு...இது நிக்கவே நிக்காது

(ரகு அவளருகில் சென்று அவள் தோள்களைத் தொடுகிறான்)

# யாருக்காக எதற்காக என்று அழுவது?

வெ. சாமிநாதன்

'எந்தப் புற்றில் எந்தப் பாம்பிருக்குமோ?' என்று சொல்வார்கள். தமிழ்நாட்டு நிலை சீரழிந்து வரும் போக்கைப் பார்த்தால், இப்பழமொழிகளெல்லாம் மாறிப் புது மொழிகள் புழங்க வேண்டிய அவசியம் ஏற்படும் போலிருக்கிறது. ஆனல் அதற்கும் வழி இல்லை. நம் மூதாதையர்கள் பேச்சு அவர்கள் அநுபவத்திலிருந்து வேறு பட்டதாக இருந்தது இல்லை. இன்று அப்படி இல்லை.

புற்றென்று நான் நினைக்காததெல்லாம் புற்ருகமாறி, அவற்றிலிருந்து நான் பாம்பென நினைக்காதனவெல்லாம் பாம்புகளாக மாறி சீறிக் கிளம்புகின்றன.

தினமணிக் கதிர் ஆசிரியர் சாவி, இந்திரா பார்த்தசாரதியிடம் நடந்து கொண்ட முறைபற்றி 'கசடதபற'வில்எழுதியிருந்தேன். அதற்குப் பல காரணங்கள் உண்டு. ஒன்று தனி மனித உறவுகளிலே இழைக்கப்பட்ட ஓர்அநீதி. அதில் 'கசடதபற' தலையிடவேண்டியது இல்லை. ஆனல் ஒரு பத்திரிகாசிரியர் ஒரு எழுத்தாளனுக்குச் செய்த அவமரியாதை, பின் பொதுவாக இன்றைய இலக்கியச் சூழலில் இவ்வாறு பெருகி வரும் சீர்கேட்டு நாற்றம்—இவற்றைக் கண்டு, 'கசடதபற' வாய் மூடி இருக்க முடியாது. கண் பொத்தி இருக்க முடியாது.

'கசடதபற' இதில் தலையிட்டுத் தன் குரலை எழுப்பியதால், நடந்து விட்ட நிகழ்ச்சிகள் அழிந்துவிடப்போவதுஇல்லை. இனி நடப்பதிலிருந்தும் உடனடியாகத் தடுத்துவிடப் போவதுமில்லை. மௌனமாக, உலகம் அறியாது இழைக்கப்பட்ட அநீதியும், ஒழுங்கீனமும் பலர் பார்வைக்கு முன் வைக்கப்பட்டுள்ளது. ஓர் ஒழுங்கீனம், நடை முறையாகிவிட்ட காரணத்தாலேயே, அதுதான் ஒழுங்கு என்ற பெயர் பெற்று விட்ட காலத்தில் இது ஒழுங்கு அல்ல, மாருக ஒழுங்கீனம், நடைமுறைதான் அதற்கு மாயத் தோற்றம் கொடுத்துள்ளது. ஆகவே எது நடைமுறையாகிறது என்பதில் நாம் விழிப்புடன் இருக்க வேண்டும் என்பது பலருக்கு உணர்த்தப்பட்டுள்ளது, இவ்வுணர்வு இனி நடைமுறை மெல்ல மெல்ல மாறுவதற்கு உதவும் என்ற நம்பிக்கையுடன்.

நியாயம் எது என்ற உணர்வும், ஒழுங்கு எது என்ற அறிவும் தமிழ்நாட்டில் அறவே மடிந்து விடவில்லை என்பது திரை மறைவில் நடந்த ஒன்று, 'கணையாழி' 'கசடதபற' ஆகியவற்றின் சின்னஞ்சிறு அம்பலத்தின் முன் வைக்கப்பட்டதும் எழுந்த வாசக எதிரொலிகளிலிருந்து தெரிந்தது. அது மட்டுமல்ல 'கசடதபற' கட்டுரையால் பாதிக்கப்பட்ட ஒரு பிரபல இலக்கியாசிரியர் கூட 'இது நல்ல காரியம். ஒரு நல்ல பொது லட்சியத்திற்கான நல்ல காரியம்' என்று சந்தோஷப் பட்டார்.

இப்படி இருக்க நான் எதிர்பாராத இடத்திலிருந்து, ஒரு எதிர்பாராத தாக்குதல், எதிர்பாராத பாஷையில் கிளம்பியிருக்கிறது.

எனக்கும், என் நண்பர் இந்திராபார்த்தசாரதிக்கும் சென்னையிலிருந்தும், தமிழ் நாட்டின் வேறு பல ஊர்களிலிருந்தும் ஒரு செய்தி கிடைத்துள்ளது. கொஞ்சம் கூட வேறுபாடற்ற ஒன்றிற்கொன்று சாட்சியமாக அமைந்த ஒரே செய்தி. ஆகவே அதன் உண்மை சந்தேகத்திற்கு இடம் இல்லாதது.

'கசடதபற'வில் வெளிவந்த என் கட்டுரையைப் படித்த ஜெயகாந்தன் ''இவன் யாருய்யா, இந்திரா பார்த்தசாரதிக்கு அடியாளா? வாலா? இல்லை முன் குடுமியா? என் ரிஷிமூலம் கதைக்கு தினமணிக்கதிர் எழுதிய போது இவன் எங்கேய்யா போயிருந்தான்? புளியம்பழம் பொறுக்கப் போயிருந்தானு? இப்பொ வரிஞ்சு வரிஞ்சு எழுதருனே'' என்று சீறியிருக்கிறுர். அவர் சீறும் பொழுது வெளிக்கிளம்பும் சென்னை நடைபாதை பாஷையை அச்சில் போட முடியாது. அவற்றிற்குப் பதிலாக, 'வால்', 'முன் குடுமி' 'புளியம்பழம்' என்ற வார்த்தைகளை நான் போட்டிருக்கிறன். (வார்த்தைகளை மாற்றியதற்கு ஜெயகாந்தன் என்னை மன்னிப்பாராக) ஜெயகாந்தனை அறிந்தவர்கள், சென்னை நடைபாதை பாஷையுடன் பரிச்சயமுள்ளவர்கள் ஜெயகாந்தன் என்ன வார்த்தைகளை உபயோகப் படுத்தியிருப்பார் என்பதைச் சுலபமாகவே யூகித்துக் கொள்ளமுடியும்.

இதை நான் வேறு யாரிடமிருந்து எதிர்பார்த்தாலும், பார்க்கா விட்டாலும் ஜெயகாந்தனிடமிருந்து எதிர்பார்க்க வில்லை. என் மனத்தில் ஜெயகாந்தன் அளித்த தோற்றமே வேறு. அவ்வளவும் பிரமை போலும். என் கட்டுரையால் யார் மறைமுகமாகக் கண்டிக்கப் பட்டுள்ளாரோ, அவரே அதை மறந்து ''இது பொது லட்சியம். சாமிநாதன் செய்துள்ளது நல்ல காரியம்'' என்று பாராட்டியுள்ள பொழுது, ஜெயகாந்தனே வாய் மூடியிருந்த போதும், அவருக்காக நான் வாதாடியுள்ள போது, அவர் இப்படிப் பேசுவார் என்று நான் கனவிலும் எதிர்பார்க்கவில்லை.

இரண்டாவதாக என்னுடைய கட்டுரைக் கருத்துக்களின் நியாய அநியாயங்களைப்பற்றி ஏதும் சொல்ல அவருக்குத் தோன்றவில்லை. அவசியம் என்று கூட நினைக்கவில்லை போலும். ஜெயகாந்தன் ஒரு எழுத்தாளர்

தாம் என்பது என் எண்ணம். (அவரைக் கேட்டால் 'தான் ஒரு சிறுகதைமன்னனுக்கும்' என்பார்) என் கட்டுரை ஓர் எழுத்தாளர் இரையான அவகதிக்கு எதிராகக் கிளம்பிய குரல். அதுபற்றி ஜெயகாந்தனுக்கு, "ஆனந்தவிகடன் கதவுகளை ஓர் இலக்கியாசிரியனுக்குத் திறந்து வைத்தவன் அதன் சரித்திரத்திலேயே நான்தான்" என்று பெருமையுடன் மார்தட்டிப் பேசிய ஜெயகாந்தனுக்கு அக்கறை இல்லை. மாறாக, அவர் அக்கறை 'எனக்கு இவன் என்ன செய்தான்?' என்பது. இது இலக்கியஅக்கறையா அல்லது வியாபார கொடுக்கல் வாங்கல் பேரமா?

நான் யாருடைய அடியாள் என்று கேட்கிறார்? 'அடியாள்' என்ற வார்த்தை அவருடைய அன்றாட வாழ்க்கை ஈடுபாட்டில் அடிக்கடி வழங்கும் technical term ஆக இருக்க வேண்டும். என்னுடைய ஈடுபாடுகளுக்கு அது அப்பாற்பட்டது. நான் எத்தகைய சந்தர்ப்பத்தில், எத்தகைய அக்கறைகளின் தூண்டுதலில் எழுதினேன், அது ஜெயகாந்தனுக்கும் பொதுவான ஓர் லட்சியம் என்பது ஜெயகாந்தன் ஓர் இலக்கியாசிரியனாக இருந்திருந்தால் தெரிந்து இருக்கவேண்டும். ஆனால் ஜெயகாந்தனுக்கு இது அடியாள் உறவாகத் தோன்றுகிறதென்றால், இப்பொழுது லட்சியங்களும், இலக்கிய அக்கறைகளும் ஜெயகாந்தனின் ஈடுபாட்டிற்கு அப்பால் விலகிச்சென்றுவிட்டன என்றுதான் அர்த்தம். இதே கேள்வியை, நான் ஜெயகாந்தனுக்கு எதிராக, தகுந்த நியாயத்துடனேயே, திருப்ப முடியாதா என்ன? தேர்தல்கால பேச்சுக் கூலி இல்லையென்றால், அவரை, காமராஜுடன், காங்கிரஸுடன் பிணைப்பது அடியாள் உறவு என்றுதானே ஆகிறது? வேறு என்ன பொது லட்சியங்கள் காமராஜ் போன்ற ஒரு அரசியல் வாதிக்கும் ஜெயகாந்தன் போன்ற ஒரு கலைஞன்(?) சுயசிந்தனைவாதி(?)க்கு இடையே இருக்கமுடியும்? சிவாஜிகணேசனின் 150வது படவிழாவில் கலந்து கொள்ள திருச்சிக்கு ஓடும் ஜெயகாந்தன் என்ன சிவாஜிகணேசனின் அடியாளா என்று என்னால் கேட்க முடியாதா? திரைப்படக்கலை விஷயத்தில் இவ்விருவரும் பிரம்மாண்டமான இடைவெளியில் நேர் எதிர்திசை நோக்குபவர்கள். அடியாள் உறவல்லாது வேறு எது இவர்களைப் பிணைக்க முடியும்?

ஜெயகாந்தனுக்கு பதில் சொல்லவேண்டிய அவசியம் எனக்கு இல்லை. அறவே இல்லை. தன் வார்த்தைகளாலேயே தன்னை அழித்துக் கொண்டவர் அவர். ஆனாலும், இதை எழுதத்தூண்டிய என் காரணங்கள் வேறு. ஜெயகாந்தனின் சீறலுக்குப் பதில் சொல்வதன் மூலம், ஜெயகாந்தனைப் பற்றியும் நாம் சற்று, public image போர்த்தியிருக்கும் திரையைவிலக்கி அறிந்துகொள்ளலாம். அது இன்றைய தமிழ் இலக்கியச் சூழல், சமூகச் சூழல் எவ்வளவு நாற்றம் பிடித்த குட்டை, அதில் ஊறிய ஒரு மட்டை என்ன கதிக்குள்ளாகியிருக்கிறது என்பதையெல்லாம் ஓரளவுக்குத் தெளிவாக்கும்.

'ரிஷிமூலம்' கதை வெளி வந்ததும் சில வாசகக் கடிதங்கள் எதிர்ப்பு தெரிவித்தன. வாசகர்களின் நாடி பிடித்துப்பார்த்து அதன் விருப்பு வெறுப்புக்களைச் சார்ந்தே, வியாபார ரீதியில் நடத்தப்படும் தினமணிக்கதிர் "இனி இம் மாதிரிக் கதைகளை தினமணிக்கதிர் வெளியிடாது" என்று வாசகர்களுக்கு உறுதியளித்தது. அளித்தவர் ஏ. என். சிவராமன்.

இந்தச் சமயத்தில் நான் என்ன செய்து கொண்டிருந்தேன் என்று ஜெயகாந்தன் கேட்கிறார். சொல்கிறேன். ஜெயகாந்தன் இதற்கு என்ன செய்யப் போகிறார் என்று காண அக்கறையுடன் காத்துக் கொண்டிருந்தேன். உடன் ஏதும் தெரியவில்லை. பின் தெரிந்தது, "சில வேளைகளில் சில மனிதர்கள்" தொடர்கதையை அதே தினமணிக்கதிரில் அவர் எழுத ஆரம்பித்தபொழுது அவர் வேறு ஏதும் செய்யவில்லை, தினமணிக்கதிர்த் தோப்பில் புளியம்பழம் பொறுக்கிக் கொண்டிருந்தார் என்று எனக்குத் தெரிந்தது. மற்ற இடங்களில் அவர் சுவைத்த புளியம்பழங்களை விட தினமணிக் கதிர்த் தோப்புப் புளியம் பழங்கள் மிகவும் சுவையாகவே இருந்திருக்க வேண்டும். அவருக்கு வாயடைத்துவிட்டது. இன்னமும் வாயடைத்திருக்கிறது. அடுத்த உலுப்பல் எப்போது என்று அண்ணாந்து வாய்திறந்து காத்துக் கொண்டிருக்கிறார்.

"நான் விருப்பத்துடன் புளியம்பழம் சாப்பிட்டுக் கொண்டிருப்பேன். ஆனால் அதற்காக தினமணிக்கதிரைக் கண்டிப்பது சாமிநாதன் வேலை" என்று ஜெயகாந்தன் சொல்கிறார்.

முதன் முதலாக என் மனத்தில் அக்காலத்தில் ஜெயகாந்தன் அளித்த தோற்றமே வேறு. சுதந்திர மனம் கொண்டவர், தைரியசாலி. யாருக்கும், எதற்கும் அடிபணிய மறுக்கும் திடம் அவருக்கு உண்டு என்றெல்லாம் நான் அவரைப்பற்றி நினைத்ததுண்டு, ஆகவே, தினமணிக்கதிருக்கு அவர் சரியான பதில் கொடுப்பார், இவ்வாறு நடத்தப் படுவதை முழங்காலிட்டுத் தலை குனிந்து ஏற்றுக்கொள்ள மாட்டார் என்றெல்லாம் நினைத்திருந்தேன். ஆனால் ஜெயகாந்தன் ஏதும் சன்னக்குரலில் முணுமுணுத்ததாகக் கூடத் தெரியவில்லை. ஏன்? என்ன ஆயிற்று ஜெயகாந்தனுக்கு? எங்கிருந்து வந்தது இக் கோழைத்தனம்?

அடுத்த தொடர்கதை கதிருக்கு எழுதும் வாய்ப்பை இழக்க அவருக்கு மனமில்லை. அவ்வாய்ப்புக்காக, தினமணிக்கதிர் அவரைப் பற்றி, அவர் எழுத்துக்களைப் பற்றி என்ன சொன்னாலும், பொறுத்துக் கொள்ளத் தயார். அவரிடம் பழைய சுதந்திர மனமும், தைரியமும் இருந்திருந்தால், தினமணிக்கதிரிலேயே இவ்வாறு தான் நடத்தப்படுவதைக் கண்டித்திருக்க முடியாதா? செய்து இருக்கலாம். ஒரு வாசகர் விரசமாக ஜெயகாந்தனின் சொந்த

விவகாரத்தில் தலையிட்டு எழுதிய பொழுது ஜெயகாந்தன் தினமணிக்கதிருக்கு மறுப்பு எழுதவில்லையா என்ன? இது சொந்த விஷயம். தினமணிக்கதிர் புரிந்து கொள்ளும். ஆனல் ஓர் இலக்கியாசிரியனுக, அவர் சீறி எழ வேண்டிய எழுத்து விவகாரத்தில் மட்டும் தினமணிக்கதிருடன் அவர் மல்லுக்கு நிற்க மாட்டார். அது தொடர்கதை எழுதும் வாய்ப்புக்களைக் கெடுத்துவிடும். ஏன்? இன்னும் கூட ஒன்று சொல்லத் தோன்றுகிறது. அவர் அப்போது எழுதிய சொந்த விவகார பதிலில் 'ஏ. என். சிவராமன் அப்படி எழுதிய போதும் கூட நீங்கள் மறுபடியும் தினமணிக்கதிரில் தொடர்கதை எழுதப் பணிக்கவில்லையா? நம் நட்பு தொடரவில்லையா?' என்ற தோரணையில் ஜெயகாந்தன் எழுதியதாக ஞாபகம். "ஆண்டை கோவிச்சுக்கிட்டாலும் நீங்கத் தனியாகக்கூப்பிட்டுக்கிணத்தடி மறைவிலே சோறு கொடுப்பீங்களே பாப்பாத்தியம்மா? அந்த விசுவாசம் போயிடுமா தாயே?" என்ற ஆண்டை—பண்ணையாள் விஸ்வாச நிலைக்கு ஜெயகாந்தன் மாறியிருக்கிறர்.

ஆகவே, சாவி—தினமணிக்கதிர்—ஜெயகாந்தன் இவர்களிடையே உள்ள உறவு எத்தகையது என்பது அவர்களுக்குத்தானே தெரியும்? டெல்லியிலிருக்கும் சாமிநாதனுக்கா தெரியும்? நாம் அச்சில் பார்த்துத் தெரியும் ஜெயகாந்தனின் தோற்றம் தான், அச்சின் பின்னிருக்கும் லோகாயத உறவுகளுக்கேற்ப, ஒவ்வொருமுறையும் மாறிக் கொண்டே வருகிறதே. இவர்களிடையே அச்சுக்குப் பின்னுள்ள உறவு எத்தகையது என்பது இவர்களுக்குத்தானே தெரியும்? சாமிநாதனுக்கா தெரியும்? அவருக்கும் அவர் எழுத்துக்கும் உள்ள உறவைப் பற்றியே நமக்கு எதுவும் நிச்சயமாகத்தெரிவதில்லையே. "இது மாதிரிக் கதைகள் இனி கதிரில் வெளிவராது" என்று வாக்குறுதி அளித்த பிறகு, தினமணிக்கதிர் தான் இஷ்டப்பட்ட மாதிரியான, அதன் வாசகர்கள் ஏற்றுக் கொள்ளத் தக்கதான எழுத்துக்களைத்தானே அது பிரசுரிக்கும்? அதற்கு இணங்கித்தானே ஜெயகாந்தனும் தினமணிக்கதிரில் 'சில வேளைகளில் சில மனிதர்கள்' எழுதியிருக்கமுடியும்? மார்க்கெட்டில் விலைபோகிற சரக்குகள் தினமணிக்கதிருக்கும், ஆனந்தவிகடனுக்கும் விலைபோகாத சரக்குகளுக்கு என்று ஒரு தனிப்பத்திரிகையின் அவசியம் ஏற்பட்டுள்ளதாக ஞானரதத்தில் அவரே எழுதியிருக்கிறரே. ஆகவே இவர்களுக்குள் ஓர் உடன்பாடு ஏற்பட்டுள்ளது. அதனல் தான் இம் மௌனம் என்பது பின்னல்தானே தெரிய வருகிறது? புளியம்பழம் சுவைக்கும் தேவை ஜெயகாந்தனுக்கு இருந்திருக்கிறது. பின் அது வேண்டுமென்ருல் சும்மாவா கிடைக்கும்?

சரி இவர்களுக்குள் ஏதோ நடந்து இருக்கிறது. இதில் நான் எங்கே வந்தேன்? ஜெயகாந்தனின் மௌனம், பின் நமக்குத் தெரிய வந்த தகவல்கள், ஜெயகாந்தனே வெளியிட்டுள்ள கருத்துக்கள் ஆகியவற்றிலிருந்து, இது ஜெயகாந்தனின் இணக்கத்துடன் தானே நடந்திருப்பதாகத் தெரிகிறது? அந்தச் சமயத்தில் 'கசடதபற' பத்திரிகை இருந்தாலும், அதில் அப்பத்திரிகை எனக்கு இடம் தந்து நான் எழுதியிருந்தாலும் என் எதிர்ப்பு கேலிக்கிடமாகியிருக்காதா? "அங்கே என்ன பலாத்காரமா நடக்குது? இஷ்டப்பட்டு நடக்கிற காரியத்திலே நீ ஏண்டா தலையிடறே? வேறே வேலே இருந்தாப் பாரு" என்று தானே எனக்குப் பதில் கிடைத்திருக்கும்? இது cognizable offence ஏ இல்லே. போலீஸ் கூட ஏதும் செய்யமுடியாது. இந்திய பீனல்சட்டத்தில் இதுபற்றிய பேச்சே இல்லே. ஜெயகாந்தன் கொஞ்சமாவது சத்தம் போட்டிருந்தால், அப்பொழுது 'கசடதபற' பத்திரிகை இருந்து நானும் மௌனமாக இருந்திருந்தால், ஜெயகாந்தனின் சீறலில் அர்த்தம் இருந்திருக்கும்.

இரண்டு வருஷம் கழித்து இப்போது சீறும் ஜெயகாந்தனுக்கு, இந்திரா பார்த்தசாரதி. சுயகௌரவமும், இலக்கியநேர்மையும், சுதந்திரமும் கொண்ட ஓர் இலக்கிய வாதியாக எப்படி நடந்து கொண்டிருக்கிறர் என்பதைக் கவனத்திற் கொண்டு வரவிரும்புகிறேன். (ஒரு வேளை தன்னுடைய public image க்கும், சுயப்ரதாபத்திற்கும் விரோதமாக தான் தினமணிக்கதிருக்கு அடிபணிந்து மௌனம் சாதித்திருக்கும் பொழுது, இந்திரா பார்த்தசாரதி, எந்த 'மன்னனும்' இல்லாத ஒரு சின்ன இந்திராபார்த்தசாரதி வெகுண்டெழுந்ததே, ஜெயகாந்தனுக்கு ஆத்திரமூட்டியுள்ளதோ என்னவோ!) மேலும், நானும் அவரும் ஒரே நகரில் இருப்பதன் காரணமாக, அடிக்கடி சந்தித்துக் கொள்வதன் காரணமாக, பொதுமக்கள் கண்மறைவில் என்ன நடந்தது என்பது அவர் அவ்வப் போது சொல்லி எனக்குத் தெரிய வந்த விவகாரங்கள். 'கசடதபற' கட்டுரையும் 'கணையாழி'யில் இந்திரா பார்த்தசாரதி எழுதியுள்ள கட்டுரையும் வெளிவராதிருந்தால் எத்தனை பேருக்கு, இந்திரா பார்த்தசாரதி—சாவி—தினமணிக்கதிர் விவகாரம்பற்றித்தெரிந்திருக்கும்? ஜெயகாந்தன்—சாவி இடையே உள்ள உறவுகள், உடன்பாடுகள் பற்றி எனக்கென்ன தெரியும்? அதுவும் ஜெயகாந்தனே மௌனத்துடன், அவ்வுறவுகளை அங்கீகரித்துக் கொண்டு, அவ்வுறவுகள் நீடிப்பதில் அக்கறையும் ஆர்வமும் காட்டும்பொழுது, அதை நான் கண்டனம் செய்ய வேண்டும் என்று எப்படி ஜெயகாந்தன் எதிர்பார்க்கிறர்?

இத்தகைய உறவுகளை மறுக்கும், எதிர்க்கும், சுய கௌரவமும் நேர்மையும் உள்ள இலக்கிய வாதிகளைப் பற்றித்தான் அக்கறை எனக்கு உண்டு. வியாபார ஈடுபாடுகளும், லோகாயத அக்கறைகளும், அம்பலத்திற்கு வராத தனி மனித உடன்பாடுகள், சமரசங்கள் இவையெல்லாம் என் இலக்கிய அக்கறைக்குப் புறம்பானவை.

மேலும் வெ. சாமிநாதன் யார்? ஜெயகாந்தனுக்கு, சிறு கதை மன்னனுக்கு பத்திரிகை உலகில் இருக்கும் ப்ராபல்யம், பலம் எங்கே? வெ. சாமிநாதன் எங்கே? தன் வீட்டுத் தேளை அடிக்க, அடுத்த வீட்டு ஆண் பிள்ளையை ஒரு பயில்வான் தேடிக்கொண்டு அலைவானேன்? அதுவும் அது திருடனைக் கொட்டிய தேளாக இருக்கும்போது, தேள் கொட்டியது யாருக்குத் தெரியும்? பல வருடங்கள் கழித்து அன்று ஏன் தேளை அடிக்க வரவில்லை என்று இன்று அந்தப் பயில்வான் என்னைக் கேட்கிறார். வருடக்கணக்காக ரசித்து அநுபவித்து புளியம் பழம் சுவைத்துக் கொண்டிருந்து விட்டுத் தேள் கொட்டியதாக்கும் என இன்று சொன்னால் என்ன அர்த்தம்?

ஒரு வேளை, ஜெயகாந்தன் அன்று நடந்ததை நினைத்து இன்று சீறி விழுவதைப் பார்த்தால், தினமணிக்கதிர் அவ்வாறு எழுதியது அவரை உண்மையிலேயே புண்படுத்தியுள்ளதோ? ஆனால் அதை வெளிக்காட்டினால் ஏற்படும் உறவு துண்டிப்புக்கு, தொடர் கதை எழுதும் வாய்ப்பு இழப்பிற்கு அவர் தயாராக இல்லையோ? அதனால் யாராவது தனக்காகக் குரல் எழுப்ப மாட்டார்களா என்று எண்ணி ஏங்கி மனம் புழுங்கிக் கொண்டிருந்திருக்கிறாரோ? இவ்வளவு காலமாக அப்படியானால் இன்றுதான் அம் மனப்புழுக்கம் வெடித்துக் கிளம்பியிருக்கிறது. அதுவும் தனிப்பட்ட முறையில், எங்கோ ஒரு அறையில், நண்பர்களிடையே, தினமணிக் கதிரின் காதுக்கெட்டாத இடத்தில், பின்னால் ''இல்லையே, அப்படி எல்லாம் ஒன்றும் சொல்லவில்லையே, இது அபாண்டம், சாவி, என்னை நம்புங்க, நம்ம நட்பு என்ன, அதையெல்லாம் மறந்துவிடுவேனா. நீங்க ஒண்ணு'' என்று மறுப்பதற்குச் சௌகரியம் தரும் வாய் வார்த்தையாவெளி வந்துள்ளது.

இன்னமும் ஒன்று சொல்லட்டுமா? ஜெயகாந்தனை அறிமுகப் படுத்தியது தான் தானுக்கும் என்று சாவி அடித்துக் கொள்ளும் பெருமை—சாவி மலேசியா சென்றிருந்த பொழுது அங்கு ஒரு பேட்டி கொடுத்திருந்தார். அது 'தமிழ் நேசன்' பத்திரிகையில் வெளிவந்துள்ளது. 'சோ'வையும், ஜெயகாந்தனையும் அறிமுகப் படுத்தியது, அவர்களுடைய இன்றைய பிராபல்யத்திற்குக் காரண கர்த்தா தான் தான் என்று சாவி சொல்லியிருக்கிறார். இது ஏதோ, காது கேட்காத இடத்தில் மலேசியாவில் சொன்னது. இங்கே தமிழ் நாட்டில் சொன்னால் நடக்கும் கதையே வேறு என்று ஜெயகாந்தன் ரசிகர்கள் நினைக்கலாம். நடந்தது தினமணிக் கதிரிலும், சென்னையில் நடந்த சுஜாதா அறிமுகக் கூட்டத்திலும். இதே பேச்சு திரும்பப் பேசப் பட்டது. என்ன ஆயிற்று? இது என் காதுக் கெட்டியதும் 'கசடதபற' எனக்குச் சந்தர்ப்பம் அளித்ததும் நான் தானே இதற்கு எதிராகக் குரலெழுப்பினேன்? இன்னமும் ஜெயகாந்தன் ஏதும் வாய் திறக்க வில்லையே! புளியம் பழம் சுவைக்கும் மும்முரமா?

இது இன்றைய ஜெயகாந்தன். பல வருடங்களுக்கு முன் எனக்குத் தெரிய வந்த ஜெயகாந்தன் வேறு. அந்த ஜெயகாந்தன் யார் கட்டுப் பாட்டிற்கும் அடங்காத, யாருக்கும் தலை வணங்காத தைரியசாலி. பள்ளிப் படிப்பு அதிகம் இல்லாத போதிலும், வாழ்க்கை சௌகரியங்கள் இல்லாத போதிலும் தானே முயன்று கற்று, சுயமாகத் தன்னை வளர்த்துக் கொண்ட அறிவாளி, சுயசிந்தனையாளன், ஒரு திராவிட கழகக்கூட்டத்திலேயே பெரியாரின் முன்னிலையிலேயே, பெரியாரின் நாஸ்திக வாதத்தை, அறிவின் அடிப்படையில் எழாத நாஸ்திகவாதத்தை, ஜாதித் துவேஷத்தை நாஸ்திக வாதமாகக் கொண்ட நாஸ்திக வாதத்தை, இந்திய தத்துவ மரபில் சார்வாகனிடமிருந்து தொடங்கும், தத்துவார்த்த பாரம்பரியமுள்ள ஒரு அறிவார்த்த மரபை அறியாத நாஸ்திக வாதத்தை, எதிர்த்துக் கண்டிக்கும் அளவுக்கு ஓர் அஞ்சா நெஞ்சன், சிந்தனையாளன். தமிழ் சமூகத்தில் உலவும் பிற்போக்கு எண்ணங்கள், குருட்டு நம்பிக்கைகள், சுயப் பிரதாபப் பெருமைகள் எல்லாவற்றையும் சாடிய அறிஞன். 40 வருட கால தமிழ்த் திரைப்படச் சரித்திரத்திலேயே இது தான் தமிழ்ப்படம்—திரைப்படம் என்று இன்றைக்கும் சொல்லத் தகுதி பெற்ற ஒரே ஒரு படத்தை அளித்த கலைஞன். புதிய பார்வையும், அசாதாரண வேகமும், துடிப்பும் கொண்ட ஒரு இலக்கியாசிரியன்—இன்று அந்த ஜெயகாந்தனுக்கு, குமுதத்தில் எதையாவது ஒரு பக்கத்திற்கு எழுதும் நிலை. 'உன்னைப் போல் ஒருவன்' போன்ற ஒரு படத்தை எடுத்திராத, இனியும் தன் ஜன்மத்திற்கும் எடுக்கத் திறனில்லாத ஒரு சாந்தாராமைப் பேட்டி காணும் நிலை. ஒரு அரசியல் கட்சிக்காக (எந்தச்சுரணையுள்ள, சுய சிந்தனையுள்ள, நேர்மை படைத்த அறிவாளி இன்றைய தமிழ் நாட்டின் எந்த அரசியல் கட்சியுடனும் தன்னை ஐக்கியப் படுத்திக் கொள்ள முடியும்?) தேர்தல் காலப் பேச்சாளனாகும் நிலை. அந்தத் தற்காலிக உறவு ஏற்படுத்திக் கொண்ட பாபத்திற்காகவே, 'உன்னைப்போல் ஒருவன்' தயாரித்த கலைஞன் தன்னைச் சுட்டுப் பொசுக்கினாலும் நடிகனாக ஏற்றுக் கொள்ள முடியாத சிவாஜி கணேசனின் 150 வது பட விழாவில் கலந்து கொள்ளத் திருச்சிக்கு ஓட வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு அடிமையாகும் நிலை (விளம்பரம் பார்த்தேன் நிறைய பத்திரிகைகளில். போனாரோ என்னவோ தெரியாது) ஒரு விமர்சனக் கூட்டத்தில் விமர்சனத்திற்குப் பதில் சொல்லத் தெரியாதோ, விமர்சனத்திற்குப் பயந்தோ ஆசிரியன் என்ற முறையில் சொல்கிறேன் என் அனுமதியின்றி யாரும் என் கதைகளை விமர்சிக்கக் கூடாது' என்று கூறும் அளவுக்கு இலக்கிய பிரக்ஞையும் விமர்சனப் பிரக்ஞையும் அற்றுப் போய்விட்ட நிலை. சாவியோ, ஏ. என். சிவராமனோ, தினமணிக் கதிரோ, என்ன சொன்னாலும், என்ன எழுதினாலும், எப்படி நடத்தினாலும், ஏதும் சொல்ல முடியாது, மனத்துக்குள் வருடக்

கணக்காக வெந்து புழுங்கும் நிலை. யாராவது புதுடில்லியிலிருந்து, மட்டப்பாறையிலிருந்து அதுவும் இல்லை நைரோபியிலிருந்து, டிம்பக்டு விலிருந்து எங்கிருந்தாவது தனக்காகப் பேச மாட்டார்களா என்று எண்ணி எண்ணி ஏங்கி மாயும் நிலை—ஏன்?

இந்த நிலைகளுள் ஒன்றிற்குக் காரணம் ஒரு சாவி. Who the hell is this சாவி? ஒரு தினமணிக் கதிர். ஒரு தொடர் கதை. அவ்வளவுக்குப் போகவேண்டாம், குமுதத்தில் ஒரு பக்கம். அது போதும். மற்ற நிலைகளுக்கும் இம்மாதிரி மட்டரக சக்திகள்தான் காரணமாக இருந்திருக்க வேண்டும் என்பது யாருடைய யூகத்திற்கும் விடப்பட வேண்டிய விஷயங்கள்.

நான் உங்கள் முன், உங்கள் சிந்தனைக்கு வைக்கும் கேள்வி இதுதான். 15 வருடங்களுக்கு முன் சிறுத்தையாகப் பாய்ந்து சீறிய ஒன்று இன்று கண்ணாடிப் பெட்டிக்குள் உறங்கிக் கிடக்கும் பாம்பிற்கு எதிர்த்த மூலையில் பயந்து, வியர்த்து, விதிர்விதிர்த்து, சப்தநாடியும் ஒடுங்கிக் கிடக்கும் ஒரு சுண்டெலியாக மாற முடியுமானால் ஒரு சாவியும், ஒரு தினமணிக் கதிரும் தேர்தல் கால பேச்சுக்கூலியும் இதைச் சாதிக்க முடியுமானால், தமிழ் நாட்டின் கதி என்ன?

தமிழ் நாட்டின் இன்றைய கதிக்கே காரணம், தமிழ் நாட்டில் எழும் ஒவ்வொரு சுய சிந்தனையாளனையும், எழுத்தாளனையும் கண்டு, அவர்கள் வளர்ச்சியைக் கண்டு மகிழ்ச்சியுறும்காலத்தில், இனித்தமிழ்நாட்டின் சரித்திரம் மாறும் என்று நாம் ஆவலுடன் எதிர்பார்க்கும் நேரத்தில், திடீரென, குணம்அற்ற, ஆனால் பலம்வாய்ந்த நச்சுச் சக்திகளால் அவர்கள் காயடிக்கப்பட்டு நம் எதிரில் உலாவத் தொடங்கி விடுகிறார்கள்.

இது ரொம்பப் பரிதாபகரமான விஷயம். ஒரு நாட்டின் ஒரு சமூகத்தின் உன்னதமே அந்த நாட்டின் எழுத்தாளர்களின், சிந்தனையாளர்களின் வீரம் சேர்ந்த அறிவினாலும், நேர்மை சேர்ந்த தலை வணங்காக் குணத்தினாலும் தான் ஆக்கப்படுகிறது.

சில வருடங்களுக்கு முன் பிரிட்டனில் இரு பத்திரிகை நிருபர்கள், அவர்களுக்குச் செய்தி கொடுத்தவர்கள் யார் என்று சொல்லும்படி நீதி மன்றத்தாலும், அரசாங்கத்தாலும் பயமுறுத்தப் பட்டபோதிலும், செய்தி கொடுத்தவர்களைக் காட்டிக் கொடுப்பது தங்கள் பத்திரிகை தர்மத்திற்கு முரணானது என்று மறுத்து சிறை சென்றார்கள். அச்சாதாரணப் பத்திரிகை நிருபர்களுக்குமுன் நம் தமிழ் நாட்டுப் பெரும்பெரும் தலைகளெல்லாம் வெட்கத்துடன் தலை குனிய வேண்டும்.

அமெரிக்க அரசாங்கம், ஓர் அரக்கத்தனமான போரில், அமெரிக்க இளைஞர்களையும் இந்தோ சீன மக்களையும் இரையாக்கி, உண்மையை மறைத்து, அமெரிக்க மக்களையும், காங்கிரஸையும் ஏமாற்றி வந்திருக்கிறது என்று காட்ட, அப்போர் பற்றிய ரகசிய அரசாங்க ரிக்கார்டுகளையெல்லாம் அமெரிக்க மக்களின் முன் வைத்தான் டேனியல் எல்ஸ்பெர்க். அமெரிக்கப் பத்திரிகைகள் அவற்றைப் பிரசுரித்தன. ராஜத்துவேஷி என்று குற்றம் சாட்டப்படக்கூடும் விளைவிற்கும் அவன் அஞ்ச வில்லை. அவனுடைய தார்மிகக் கோபத்திற்கு, பின்வரும் அமெரிக்கத் தலைமுறைகள் தலைவணங்கும்.

உலகிலேயே முதன் முறையாக Film Archives ஒன்றைத் தொடங்கி, அதன் மூலம் உலகத்திரைப்படச் சரித்திரத்திலே, குறிப்பாக ஃப்ரெஞ்சுத் திரைப்படச் சரித்திரத்திலே ஒரு புது உத்வேகத்தைக் கொடுத்து ஒரு புதிய மரபையும் தோற்றுவிக்கக் காரணமான, French Cinematheque-ன்டைரக்டரான Henri Langlois அரசாங்கம் அளித்த பணத்திற்குசரிவரக்கணக்குவைத்துக்கொள்ளவில்லை என்ற காரணத்திற்காக Andre Malraux வினாலேயே டைரக்டர் பதவியிலிருந்து நீக்கப்பட்டபொழுது உலகப் புகழ்பெற்ற ஃப்ரெஞ்சுத் திரைப்பட டைரக்டர்கள், கலைஞர்கள், நடிகர்கள், ஓவியர்கள், Sartre Simon de Beauvoir போன்ற எழுத்தாளர்—தத்துவ ஞானிகள் எல்லோரும், "There are plenty of good accountants and managers in France, but there is only one HENRI LANGLOIS" என்று கோஷமிட்டுக் கொண்டே, பாரிஸின் தெருக்களில், Andre Malraux-ன்காரியாலயத்தின் முன் ஊர்வலம் வந்து கண்டனம் செய்தனர். கோஷம் இட்ட, ஊர்வலம் வந்த யார் அந்த Sartre? அரசாங்கத்திற்கு எதிராக அல்ஜீரியப் புரட்சிக்கு சார்த்ர் எவ்வளவு கிளர்ச்சி செய்த போதிலும் அரசாங்கத்திற்கு எவ்வளவோ விஷயங்களில் எவ்வளவோ வகைகளில் எதிராக இருந்த போதிலும் அவரைக் கைது செய்ய ஆலோசனை சொன்னவர்களுக்கெல்லாம் "Sartre is also France. How can you arrest France?" என்று டிகால் பதிலளித்தார். அத்தகைய சார்த்ர் தான் Langlois ன் உத்தியோக நீக்கத்தை எதிர்த்து கோஷமிட்டுக் கொண்டு தெருக்களில் ஊர்வலம் வந்தார். அந்த சார்த்ரைப் பெற்ற ஃப்ரெஞ்சு நாட்டுக்கு நம் தலை வணக்கம்.

இங்கு நமக்குக் கிடைத்தது ஒரு சாவி, ஒரு தினமணிக் கதிர். இதுகளுக்கெல்லாம் பெட்டிப் பாம்பாக அடங்கும் ஒரு ஜெயகாந்தன். நீரளவே ஆகுமாம் நீராம்பல். தமிழ் நாட்டின் தகுதிக்கேற்றவாறுதான் நமக்கு. பத்திரிகையாளரும், எழுத்தாளர்களும், அறிஞர்களும், சிந்தனையாளர்களும், சிறுகதை மன்னர்களும் கிடைக்கிறார்கள். அவர்கள் அநுஷ்டிக்கும் தர்மமும், நேர்மையும், கொண்டுள்ள தைரியமும் வேறு எப்படி இருக்க முடியும்? நாம் யாருக்காக, எதற்காக என்று அழுவது? ●

Published by N. Mahaganapathy 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamoorthy No. 1, Devadi Street, Madras-4.

# வாசகர் வட்டம்

'வாசகர் வட்ட' நூல்களைப் பத்திரிகைகள் போற்றிப் புகழ்கின்றன வாசகர்கள் வாயார வாழ்த்துகிறார்கள். ஒவ்வொன்றும் தனிச்சிறப்புள்ள புதுமுயற்சி. தவறாமல் படிக்கவேண்டிய நூல்கள்.

### 1965-ஆம் ஆண்டுப் பிரசுரங்கள்

| | | விலை |
|---|---|---|
| சோக்ரதர் & ஆத்ம சிந்தனை<br>ராஜாஜி | ரூ. | 5 00 |
| புத்ர<br>லா. ச. ரா. | ரூ | 5 00 |
| விஞ்ஞானத்தின் புதிய எல்லைகள்<br>(தொகுப்பு) | ரூ. | 5 00 |

### 1966-ஆம் ஆண்டுப் பிரசுரங்கள்

| | | |
|---|---|---|
| மாயத் தாகம்<br>ஆர். ஷண்முகசுந்தரம் | ரூ. | 5 00 |
| மாஸ்கோ டயரி<br>கே பி. எஸ் மேனன் | ரூ. | 5 00 |
| பிரயாண இலக்கியம்<br>(தொகுப்பு) | ரூ. | 5 00 |
| வேள்வித் தீ<br>எம். வி. வெங்கட்ராம் | ரூ. | 5 00 |
| அண்டை வீட்டார்<br>பி. கேசவதேவ் | ரூ | 6 00 |
| பூமி எனும் கிரகம்<br>ஜார்ஜ் கேமாவ் | ரூ. | 5 00 |

### 1967-ஆம் ஆண்டுப் பிரசுரங்கள்

| | | |
|---|---|---|
| இரு நாடகங்கள்<br>எஸ். பி. மணி & ஆர்வி | ரூ. | 6 00 |
| எல்வின் கண்ட பழங்குடி மக்கள்<br>வெரியர் எல்வின் | ரூ. | 5 00 |
| மறு கதைகள்<br>(தொகுப்பு) | ரூ. | 6 00 |
| நினைவுகள்<br>Dr. கே. எஸ். சஞ்சீவி | ரூ | 5 00 |
| அற்ப ஜீவி<br>ஆர். விஸ்வநாத சாஸ்திரி | ரூ. | 5 00 |
| வ. ரா. வாசகம்<br>வ. ரா. | ரூ. | 5 00 |

### 1968-ஆம் ஆண்டுப் பிரசுரங்கள்

| | | விலை |
|---|---|---|
| இதோ தேவன்<br>'தேவன்' | ரூ. | 5 00 |
| புன்னகை பூத்த நாடு<br>பேராசிரியர் எம். ஆர்.<br>பாலகிருஷ்ணன் | ரூ. | 6 00 |
| அறுசுவை<br>6 குறு நாவல்கள் | ரூ. | 7 00 |
| அக்கரை இலக்கியம் (தொகுப்பு) | ரூ. | 11 00 |
| ஆத்மாவின் ராகங்கள்<br>நா. பார்த்தசாரதி | ரூ. | 6 00 |
| சிறிது வெளிச்சம்<br>கு. ப. ரா. | ரூ. | 7 00 |

### 1969-ஆம் ஆண்டுப் பிரசுரங்கள்

| | | |
|---|---|---|
| மண்ணில் தெரியுது வானம்<br>ந. சிதம்பர சுப்பிரமணியன் | ரூ. | 7 50 |
| பூனைக்கண்<br>ஸ்ரீமதி திரிவேணி | ரூ. | 8 00 |
| சாயாவனம்<br>சா. கந்தசாமி | ரூ. | 5 25 |
| குயிலின் சுருதி<br>ந. பிச்சமூர்த்தி | ரூ | 5 00 |
| வேரும் விழுதும்<br>க. சுப்ரமணியம் | ரூ. | 5 00 |
| அபிதா<br>லா. ச. ரா. | ரூ. | 5 00 |

### 1970 அரையாண்டுப் பிரசுரங்கள்

| | | |
|---|---|---|
| பள்ளிகொண்டபுரம்<br>நீல. பத்மநாபன் | ரூ. | 6 75 |
| நடந்தாய் வாழி காவேரி (சிறப்பு நூல்)<br>தி. ஜானகிராமன் & சிட்டி | ரூ. | 10 00 |
| மோகமுள்<br>தி. ஜானகிராமன் | ரூ. | 15 00 |
| உதய நிழல்<br>எஸ். வைத்தீஸ்வரன் | ரூ. | 3 00 |

(எல்லாப் புத்தகங்களுக்கும் தபால் செலவு கூடுதல்)

'கசடதபற'வின் 1971-72ம் வருடச் சந்தாதாரர்களுக்கு 31—12—1971 வரை மேற்கண்ட விலைகளில் (மோகமுள், உதயநிழல் நீங்கலாக) 12½% குறைத்துத் தரப்படும்.

---

விவரங்களுக்கு :

**bookventure**

14, THANIKACHALAM CHETTY ROAD, MADRAS-17.

